# மிகச் சிறிய விஷயங்கள்தான் எங்களுக்கு மிகப் பெரிய பொறுப்பினை அளிக்கின்றன.

ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்களின் முன்னோடிகளான சுந்தரம்-கிளேட்டனுக்கு பாதுகாப்பு என்பது ஒரு அர்த்த மற்ற உறுதிமொழி அல்ல. எங்கள் சாதனங்கள் முழுமையான பாதுகாப்பிற்கு உறுதியளிப்பதற்கேற்ப உருவாக்கப்பட்டவை.







ஒவ்வொரு நாளும் ஆயிரக்கணக்கான பெற்றோர்கள் அவர்களுடைய அன்புச் செல்வங்களைப் பள்ளிக்கு அனுப்புகின்றனர் — வர்த்தக வண்டிகளில் பொருந்தியுள்ள பாதுகாப்பு சாதனங்களில் நம்பிக்கை வைத்தே.

இந்த பாதுகாப்புச் சாதனங்களை உருவாக்கிய நாங்கள் பெருமிதமடைவது இயற்கைதானே. இருந்தபோதிலும் இது ஒரு மிகப் பெரிய பொறுப்பு. முழுமையான காற்று மற்றும் காற்று-உதவி பிரேக் சாதனங்களின் ஒவ்வொரு சிறிய உறுப்பினையும் மிகவும் நுணுக்கமாகக் கவனிக்கிறோம். இதனால்தான் அனேகமாக ஒவ்வொரு ஹெவி-ட்யூடி வர்த்தக வண்டியிலும் எங்களுடைய ஏர்-பிரேக் ஆக்சுவேஷன் சாதனங்கள் அசல் உறுப்புகளாகப் பொருத்தப்பட்டுள்ளன. இது ஒரு அத்யாவசியமான தேவையும்கூட.

**உங்கள் பாதுகாப்பிற்கு எங்கள் உத்திரவாதம்**

தொடர்ச்சியான ஆராய்ச்சி, அபிவிருத்தி மற்றும் தரக்-கட்டுப்பாடு — இவைகள் முழுமையான பாதுகாப்பினை அளிக்கும் ஒரு பிரேக் சாதனத்திற்கு வித்திடுகின்றன.

**நாங்கள் உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கின்றோம் — அதனைப் பாதுகாக்கவும்**

CD-TVS' அளிக்கும் முழுமையான காற்று மற்றும் காற்று-உதவிகொண்ட பிரேக் சாதனங்களின் உறுதியான பாதுகாப்பு எப்பொழுதும் உங்களுக்குக் கிடைப்பதற்கு உங்கள் சாதனத்தை முறையாகப் பராமரியுங்கள். மற்றும் எப்பொழுதும் அசல் CD-TVS உறுப்புகளையே வாங்கி உபயோகியுங்கள். இதனை அலட்சியம் செய்ய வேண்டாம். உங்கள் நன்மைக் காகத்தான் சொல்கிறோம்.

**சுந்தரம் - கிளேட்டன் லிமிடெட்**

பாடி, சென்னை 600 050

**உங்கள் பாதுகாப்பு எங்கள் தொழில்**




SAA/SCL/2588

# பொங்கலோ பொங்கல்!


ஒட்டடைக்குச்சி
அவர் குடுமியை
இழுக்குது...
பின்னாலே பாரு!




என்ன மதன்? கரும்பு
கொண்டு வரச் சொன்னா
கரும்பு வில்லோடு
மன்மதனாக வந்து
நிக்கறே!


சினிமாவிலே நடிச்ச மாடாச்சே..
காமெரா கொண்டு வந்து
சினிமா படம் புடிச்சாதான்
மஞ்சி விரட்டுக்கு பாயும்
போலிருக்கு... இந்தமாடு!


பொங்கல் அரிசியை
நல்லா ஸர்ஃப்
போட்டுக்
கழுவினேன்
PONGAL FESTIVAL


என்ன பண்டாரம் ஸார், டெய்லி
ஆப்பிள் ஜூஸ் சாப்பிடுபவர், இன்னிக்கு
சும்மா போறீங்க?
இன்னிக்கு ஒரு நாள்
பல்லைக்கடிச்சுகிட்டு
கரும்புச்சாறு
சாப்பிடப் போறேன்..!
பொங்கலாச்சே!

# உயர் ஊதியத் தீவில்



## ஊதிய உயர்வு!

'செம்பியன்'

பாங்கு ஊழியர்களின் 'கோ ஸ்லோ'வும் அதைத் தொடர்ந்து இரண்டு நாட்கள் வேலை நிறுத்தமும் ஜாம் ஜாம் என்று நடந்தேறியது. செக் கிளியரன்ஸ் தாமதங்கள் கன ஜோராகத் தொடர்கின்றன. காலவரையறையற்ற வேலைநிறுத்தம் ஒன்று பாக்கியிருக்கிறதென்றும் அபயம் அளித்துள்ளார்கள். ஆனால் இதுவும் போதாது என்கிறேன் நான். அவர்கள் தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக்கொள்ளப் புதிய புதிய போராட்டங்களைத் தொடங்கவேண்டும். புதிய புதிய போராட்டங்களைத் தொடங்குவதற்கு ஏற்பப் புதிய புதிய கோரிக்கைகளையும் எழுப்ப வேண்டும்! இதோ என்னுடைய சில யோசனைகள்:

செக்யூரிட்டி அலவன்ஸ்: மற்ற எந்தத் துறையிலும் வேலை செய்பவர்களைவிட பாங்கு ஊழியர்கள் (எல். ஐ. ஸி. ஊழியர்களும் தான்) மிக அதிகமாகச் சம்பளம் வாங்குகிறார்கள். இதை ஒப்புக் கொள்கிறோம். ஆனால் இத்துறையில் இருக்கிற ஆபத்துக்களை யார் எண்ணிப் பார்க்கிறார்கள்? இப்போதெல்லாம் 'ஷோலே' போன்ற பலாத்காரப் படங்கள் மிக அதிகமாக வருகின்றன. அதைப் பார்த்து விட்டுப் பாங்கைக் கொள்ளை யடிக்கலாம் என்று ரொம்பப் பேருக்குத் தோன்றுகிறது. கொள்ளையடிக்க வருபவர் துப்பாக்கி கத்தி இத்யாதியுடன்தான் வருவார், மிரட்டுவார். எனவே பாங்கு உத்தியோகம் உயிராபத்து நிரம்பியது. ஆதலால் இந்த உத்தியோகத்தில் இருப்பவர்களுக்கு ''செக்யூரிட்டி அலவன்ஸ்'' என்று மாதம் நூறு ரூபாயாவது தரவேண்டும் என்று போராடலாம்.

சம்சார சிக்கல் அலவன்ஸ்: ''ஒர்க் டு ரூல்'' என்ற போராட்ட முறையை பாங்கு ஊழியர்கள் கடைப்பிடிக்கும்போது, ''ஒர்க் டு நோ ரூல்'' என்பதை விட, ''ஒர்க் டு ரூலே'' தேவலாம் என்று ஸ்ரீமான் பொதுஜனம் கருதக்கூடும். ஆனால் பாங்கு ஊழியர்கள் எதிர்நோக்க வேண்டியிருக்கிற சிக்கல்களைப்பற்றிப் பொதுஜனம் எங்கே சிந்திக்கிறார்? உதாரணமாகப் பாருங்கள், பாங்கில் பணியாற்றும் அதிர்ஷ்டம் பண்ணின பிரும்மச்சாரி கட்டிளம் காளைகளுக்குக் கல்யாண மார்க்கெட்டில் கிராக்கி அதிகம். எப்படியாவது அவர்களைச் சம்சார சாகரத்தில் சிக்க வைக்கப் பெண்ணைப் பெற்றவர்கள்




வலைவீசிக் கொண்டிருப்பார்கள். பிரும்மச்சாரிகள் தங்கள் சுதந்திரத்தை இழந்து அடிமைப்படும் ஆபத்து நிரம்பவே இருக்கிறது. எனவே இவர்களுக்குச் ''சம்சார சிக்கல் அலவன்ஸ்'' தரப்படவேண்டும். ஏற்கெனவே வலையில் சிக்கிக் கல்யாணம் பண்ணிக் கொண்டவர்களைப்பற்றியோ சொல்லவே வேண்டாம். இந்த அலவன்ஸ் நிச்சயமாகத் தரப்பட வேண்டியதுதான்.



பொறுமை பேட்டா: என்னதான் விலைவாசிகள் உயர்ந்தாலும் அதற்கேற்ப பாங்கு ஊழியரின் D. A. உயர 75 முதல் 100 சதவிகிதம் வரை விலைவாசி உயர்வும் ஊதிய உயர்வும் ஒன்றுக்கொன்று சரிக்கட்டிப் போகின்றன. எனவே பாங்கு ஊழியர்களுக்கு அதிக சிரமமில்லைதான். ஆனால் இதனால் அவர்களுக்கு ஏற்படுகிற வேறுபல தொல்லைகளைப் பற்றி யார் சிந்திக்கிறார்கள்? மற்ற அரசுத் துறை ஊழியர்களுக்குக் கிடைப்பதைவிட மூன்று மடங்கு அதிக D.A. வாங்குகிறார்களே

என்று மற்றவர்கள் சதா பொறுமைப் பட்டுக்கொண் டிருக்கத் திருஷ்டிபடுகிறது. எனவே பாங்கு ஊழியர் களுக்கு அடிக்கடி வீட்டில் திருஷ்டி கழித்துப் போட வேண்டியிருக்கிறது. தேங் காயும் கற்பூரமும் விற்கிற விலையில் எவ்வளவு செலவு? எனவே இதை ஈடுகட்ட ''பொறுமை பேட்டா'' என்று ஒன்று தரப்படவேண் டியது மிகவும் அவசியம்.

இதற்காகப் ''பொறுமை இன்டெக்ஸ்'' என்று ஒன்று ஏற்படுத்தலாம். 'பொறுமை இன்டெக்ஸ்'ஸில் உயர்கிற ஒவ்வொரு நாலு புள்ளிகளுக்கும் D. A.வில் பத்து ரூபாய் கூட வேண்டும் என்று 'பொறுமை பேட்டாவை' D. A.வுடன் இணைத்துவிட முடியுமானால் நல்லது. இதற்காக விரைவிலேயே ஒரு மணி நேர ''பென்டவுன் ஸ்ட்ரைக்'' நடத்தித் தங்கள் கோரிக்கையின் நியாயத்தைப் பாங்கு ஊழி யர்கள் வன்மையாக நிரூபிக்கலாம்.



ஒரு பந்து வீச்சாளரின் பந்துகளை எல்லாம் ஆட்டக்காரர்கள் அடித்து நொறுக்கிக் கொண்டிருந்தார்கள். விக்கெட்டே கிடைக்காத நிலையில் ஆட்டம் முடிந்தவுடன் அவர் சொன்னது: ''எனக்கும் விக்கெட் கிடைத்திருக்க வேண்டும். ஆறுதல் காலரியில் கேப்புத் தொப்பி அணிந்து ஆறுவது வரிசையில் உட்கார்ந்தவர் சுத்தமோசம்; இரண்டு காட்சுகளைக் கோட்டை விட்டு விட்டாரே!''

ருக்மணி ராமச்சந்திரன்.

உச்சவரம்பற்ற ஓவர்டைம்: சம்பள உயர்வு, போனஸ், மற்ற சில்லறை அலவன் சுகள் பற்றியெல்லாம் போர்க்கொடி உயர்த்தி யுள்ள ஊழியர்கள் இன்னும் ஒரு முக்கிய மான விஷயம் பற்றியும் கூறியுள்ளனர்: ''ஏற் கெனவே கொடுத்து வருகிற விகிதப்படி D.A. தொடரவேண்டும், சரித்திரத்தின் ஓர் அங்க மாகிவிட்ட இப்புனித விஷயத்தில் கைவைக்கக் கூடாது; அது மகாபாவம். மற்ற அரசு ஊழியர்களுடைய D.A. விகிதத்துக்கு ஏற்பத் தங்களுடைய D. A. வைக் குறைத்துவிடக் கூடாது என்பது பாங்கு ஊழியர்களின் போராட்டத்தின் ஜீவனுள அம்சம். இந்த ஜீவனுள விஷயத்துடன் இன்னொரு ஜீவா தாரமான விஷயத்தையும் அவர்கள் மறக் காமல் பற்றிக் கொள்ள வேண்டும். ரிஜிஸ் தரில் கையெழுத்துப் போடச் சம்பளம் வாங் குவதும், வேலை செய்வதற்கு ஓவர்டைம் பெறுவதும் பாங்கு சரித்திரத்தின் ஓர் அங்க மாகிவிட்ட புனித சம்பிரதாயம். இதை மாற்றுவதும் மகா பாவம். எனவே குறைந்த பட்ச ஓவர்டைம் பணம் ஒவ்வொரு பாங்கு ஊழியருக்கும் உறுதி அளிக்கப் படவேண்டும் என்பதோடு ஓவர்டைமுக்கு உச்சவரம்பும் விதிக்கப்படலாகாது.

மனோபல பேட்டா: ''உயர் ஊதியத் திவுகள்'' என்று பூதலிங்கம் கமிட்டி பாங்கு, எல். ஐ. ஸி. ஊழியர்களை வர்ணிக்கிறது. பின்னே கமிட்டி பாங்கு விஷயத்தில் இந்த முரண்பாட்டைச் சரிசெய்யலாம் என சிபாரிசு செய்கிறது. இவை எல்லாம் எவ்வளவு அர்த்த மற்ற விஷயங்கள் என்று சற்று யோசித்துப் பார்த்தாலும் புரிந்துபோகும். ஒரு பாங்கு ஊழியருக்கு இருக்க வேண்டிய பொறுப் புணர்ச்சி அவருக்குத் தேவைப்படும் மனோ பலம் பற்றிப் பூதலிங்கத்துக்கும் பிள்ளைக்கும் என்ன தெரியும்? ஒரு பாங்கு அதிகாரியோ ஊழியரோ தினந்தோறும் லட்சக் கணக்கான ரூபாய்களைப் பார்க்கிறார், கணக்கெழுது கிறார், கையாள்கிறார். இவையெல்லாம் தம் முடையவை அல்ல என்ற பற்றற்ற நிலையை அவர் தோற்றுவித்துக் கொள்ள வேண்டும். இல்லாதபோனால் சபலத்துக்கு ஆளாகிக் கம்பி எண்ண நேரலாம். இவ்விதம் ஆசை களுக்கு மத்தியிலேயே அவற்றை வெல்லும் துறவியாக வாழ்வதும் வேலை செய்வதும் எவ்வளவு கஷ்டம்! பூதலிங்கமும் பிள்ளையும் எக்கேடாவது கெட்டுப் போகட்டும். முதலில் ''மனோபலப் பேட்டா'' என்று மேலும் ஒரு கணிசமான தொகையை பாங்கு ஊழியர் களுக்கு வழங்கிவிட்டு மறு காரியம் பாருங்கள்!

ஸ்ட்ரைக் அலவன்ஸ்!: இத்தனை கோரிக் கைகளை எழுப்பி, போராட்டங்களை நடத்தி அடிக்கடி ஸ்ட்ரைக் பண்ண வேண்டியிருப்ப தால் பாங்கு ஊழியர்கள் என்றாவது சட்டத் துக்கு விரோதமான தவறான வேலைநிறுத்தம் செய்து சம்பளம் பிடிபட்டுப் போகிற ஆபத் தும் இருக்கிறது. இதற்கும் ஒரு ஸ்ட்ரைக் நடத்திச் சம்பளம் பிடிபட்டுப் போகாமல் காத்துக் கொள்ளலாம்தான். என்றாலும் இந்த ஆபத்துக்கு அவர்கள் துணிய வேண்டி யிருக்கிறதே! மக்களின் வெறுப்பைச் சம்பா தித்துக் கொள்கிற சங்கடத்துக்கும் அவர்கள் ஆளாக வேண்டியிருக்கிறதே. ஸ்டிரைக் செய்வதால் வேலையின்றிச் சோம்பி இருக்க உடல் ஊதிப்போய் அதனால் ஆரோக்கியம் கெடுகிற வாய்ப்பு உள்ளதே. எனவே இந்தக் கஷ்ட நஷ்டங்களை ஈடுகட்ட ''ஸ்டிரைக் அலவன்ஸ்'' என்று ஒன்று தரப்பட வேண் டியது மிகவும் நியாயம். வேலைநிறுத்தம் நடக்கும் ஒவ்வொரு தினத்துக்கும் ஊழிய ருக்கு ரூ 20, அதிகாரிக்கு ரூ 40 என்று குறைந்த பட்சமாக ஸ்டிரைக் அலவன்ஸை நிர்ணயிக்கலாம். இதேபோல் 'கோ ஸ்லோ', 'ஓர்க் – டு – ரூல்', 'பென் டவுன் ஸ்ட்ரைக்' முதலியவற்றுக்கு விகிதங்களை நிர்ணயிக்க லாம். இந்தக் கோரிக்கையை வலியுறுத்த அனைத்திந்திய பாங்கு ஊழியர்கள் – அதிகாரி களின் புதியதொரு வேலைநிறுத்தத் திட்ட அறிவிப்பை விரைவிலேயே எதிர்பார்ப்போ மாக! சுபமஸ்து!

ஓர் எச்சரிக்கை: கிரிக்கெட் துணுக்குகள் ரசிப்பதற்கு; அத்துடன் உள்ள கிரிக்கெட் ஆக்ஷன் படங்கள் ஆல்பத்துக்கு- இரண்டுக்கும் முடிச்சுப் போட்டுக் குழப்பிக்கொள்ளாதீர்கள்!


விருந்தாளிகள்


கர்நாடக அரசு
ஆந்திர அரசு
இந்த டிரஸ்ஸை கொஞ்ச நாளுக்கு நாங்க போட்டுக்கறோம்!
இ. காங்கிரஸ் போராட்டம்


இந்தி திணிப்பு ஒழிகன்னு சொல்றதிலே என்ன வீரம் இருக்கு? குடியரசு தினத்திலே கறுப்புக்கொடி பிடிச்சுக் காட்டுவாரா?
இந்தி திணிப்பு ஒழிக! இந்தி திணிப்பு ஒழிக!
உடன் பிறப்பு

கல்கி

1979 ஜனவரி 14
காளயுக்தி தை 1

மலர்: 37 இதழ்: 24

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்மியடி பாப்பா - பாரதியார்.

# காத்திருக்கும் கண்கள்!

கிரிக்கெட்.

அதிர்ஷ்ட ஆட்டம் என்று வர்ணிக்கப்படுவதுண்டு.

அல்ல, ஆற்றலுக்கே முதலிடம் என நிரூபித்து வருகிறார் கவாஸ்கர்.

சில நேரங்களில் சில ஆட்டக்காரர்களின் திறமை வெளிப்படும். அங்கே ஆற்றல் அரைப்பங்கு; அதிர்ஷ்டம் அரைப்பங்கு.

கவாஸ்கர் பல நேரங்களில் பலதரப்பட்ட பந்து வீச்சுக்களையும் எதிர்த்து வெற்றி கொள்கிறார். இங்கே ஆற்றல் முழுப்பங்கு, அதிர்ஷ்டம் ஏதோ சிறிதளவு.

கிரிக்கெட் கவாஸ்கரிடம் கைகட்டி நிற்கிறது என்றால், காரணம், அதன் விஞ்ஞானத்தில் அவர் கரை கண்டிருக்கிறார்; அதன் நெளிவு சுளிவுகளை அறிந்திருக்கிறார்; தமது உடலையும் அதற்கேற்பப் பக்குவப்படுத்தி வைத்திருக்கிறார்.



சங்கீத ஞானம் இருக்கும் பலருக்கு, கச்சேரிக்குத் தேவையான ஒரு ஜிலு ஜிலுப்புடன் பாடவராது. சாரீரமும் வசதிப்படாது. ஒன்றிருந்தால் ஒன்று இராது.

கிரிக்கெட்டில் ஞானமும் வேண்டும், ஆடும் திறனும் வேண்டும், அதில் ஒரு ஸ்டைலும் வேண்டும், சிந்தனையை ஒருமுகப்படுத்த வேண்டும். கவாஸ்கரிடம் எல்லாம் இருக்கிறது. அவர் ஆட ஆட இன்றைக்கெல்லாம் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருக்க நாம் தயார்.

அவருடைய சாதனைகள் — ரிகார்டுகள், இன்று குழந்தைகளின் வாயில் மழலையாக வெளிப்படும் அளவு பிரசித்தி பெற்று விட்டன. திருப்பிக் கூறத் தேவையில்லை.

காப்டனாகவும் சிறந்திருக்கிறார் கவாஸ்கர். மூன்றாவது டெஸ்டில் அவரது 'ஸ்போர்ட்டிங் டிக்ளரேஷன்' சிலிர்க்க வைத்தது. ஒரு சிறந்த காப்டன் எந்தக் கட்டத்தில் எப்படி நடந்து கொள்ளவேண்டுமோ அப்படி நடந்து கொண்டார். ஆட்டம் டிரா என்றாலும் தார்மீக வெற்றி இந்திய அணிக்குத்தான், கவாஸ்கரின் தலைமைக்குத்தான்.

சென்னை டெஸ்ட் வெற்றியோ, தோல்வியோ, டிராவோ எப்படியானாலும் சரி, கவாஸ்கரின் கலைத்திறன் மீண்டும் விகசிப்பதைக் காணக் காத்திருக்கிறோம்.

---

## வெங்கட்

அவருடைய பௌலிங் சாதனைகள் இருக்கட்டும். இதோ கராச்சி டெஸ்ட்டைப் பார்த்த வர்ணனையாளர் வி. ராமமூர்த்தி கூறுவதைக் கேளுங்கள்: "முஷ்டாக் முகமதும் ஜாவெத் மியாந்தாதும் நன்கு காலூன்றிக் கொண்டிருந்த வேளையில் மொஹிந்தருக்கு ஸப்ஸ்டிடியூட்டாக வந்தார் வெங்கட். க்ளோஸ் ஃபீல்டிங் நிபுணரான அவர் ஃபைன் லெக்கில் நின்றார். நின்ற சூட்டுடன் முஷ்டாக் அடித்த ஓர் உயரமான காட்சை லபக் என்று எளிதாகப் பிடித்து பாக் காப்டனை வெளியேற்றினார். ஓவர் முடிந்ததும், வந்ததும் போனதும் தெரியாமல் மொஹிந்தருக்கு இடமளித்து பெவிலியன் திரும்பினார். வெங்கட்டிடம் காட்சுகள் காந்தத்தால் ஈர்க்கப்பட்டது போல் வந்து ஒட்டிக்கொள்ளும்!"

சமீபத்தில் மூன்றாவது டெஸ்டில் கவாஸ்கரின் சாதனைகள், வெங்ஸர்கார் அளித்த அபார ஒத்துழைப்பு ஆகியவை ஏற்கெனவே கிரிக்கெட் சரித்திரத்தில் இடம் பெற்றுவிட்டவை. ஆயினும் மாட்ச் கிட்டத்தட்ட நமக்கு வெற்றிதான் என்ற நிலைக்கு வந்ததற்கு பௌலர்களின் திறமையும் ஒரு காரணம்.

வெங்கட் முதல் இன்னிங்ஸ் 33-15-55-4

2வது இன்னிங்ஸ் 30-13-47-3

சிறந்த ஆல்ரவுண்டர் வெங்கட் தமது சொந்த ஊரில் ஆடவரும் போது 'த்ரீ சீர்ஸ்' கூறி வாழ்த்தி வரவேற்கிறோம்.




புஷ்டி, போஷாக்கு என்ற வார்த்தைகள் பொங்கி நிறைந்து வளர்ந்து வளமை அடைவதைக் குறிக்கின்றன. இந்த வார்த்தைகளுக்கு தாது 'புஷ்' என்பது. புஷ்யம் என்பது ஒரு நக்ஷத்திரம். 'பூசம்' என்று சொல்வது அதைத்தான். ஒரு மாஸத்தில் பௌர்ணமியை ஒட்டி எந்த நக்ஷத்திரம் வருகிறதோ அதையே மாஸத்தின் பெயராக வைப்பதால், தை மாஸத்தில் பூர்ணிமை பெரும்பாலும் புஷ்யத்தில் வருவதால் இதற்குப் புஷ்யமாஸம் அல்லது பௌஷ்ய மாஸம் என்றே பேர். அதாவது இந்த மாஸத்தின் முதல்நாள் மட்டுமின்றி மாஸம் முழுதுமே வளர்ந்து வளமாகிப் பொங்கி நிறைவதான ''பொங்கல்'' என்ற பொருள்கொண்ட புஷ்யப் பேரை வைத்துக் கொண்டிருக்கிறது!

நடராஜா பொங்குகிற ஆனந்தத்தோடு நர்த்தனம் செய்தது தைப்பூசத் திருவிழாவில் தான்! அது ஸாக்ஷாத் பரமேச்வரனின் பொங்கல். ராமலிங்க ஸ்வாமிகள் விழாவாகவும் அது இருக்கிறது.

தமிழிலே ஏன் புஷ்ய மாஸத்துக்குத் ''தை' என்று பேர் வந்தது? மற்றமாஸங்களைப் பார்த்தால் ஸம்ஸ்கிருதத்தில் சித்ரா, வைசாகி, ஆநுஷி, ஆஷாடி, ச்ராவணி, ப்ரோஷ்டபதி, ஆச்வயுஜி, கார்த்திக, மார்க்கசிர்ஷி, மாகி, பால்குனி என்ற பெயர்கள் தமிழிலும் கிட்டத் தட்ட அதே ரூபத்தில் சித்திரை, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, கார்த்திகை, மார்கழி, மாசி, பங்குனி என்று இருக்கின்றன. ஆனால் இந்தத் 'தை' என்பது மட்டும் 'பௌஷ்ய' என்பதன் ஸம்பந்தமே இல்லாமலிருக்கிறது. இது ஏன்?

புஷ்யத்துக்கே 'திஷ்யம்' என்றும் இன்னொரு பேர் உண்டு. புஷ்யம் குறித்தது 'பௌஷ்யம்' என்கிற மாதிரி, திஷ்யம் குறித்தது 'தைஷ்யம்.' அதுதான் தமிழில் முதலெழுத்து மட்டும் நின்று 'தை' என்றாகியிருக்கிறது!

நடராஜா ''தை தை'' என்று ஆடிப் பொங்கின மாதிரி — அவர் பொங்கினதாலேயே — லோகமெல்லாம் பொங்குகிற மாஸமாக இருப்பதால் இதற்குப் பொங்கல் பேர் பொருத்தமாயிருக்கிறது. பயிர்கள் பொங்கி விளைந்து அறுவடைக்கு வருவது இந்த மாஸத்தில்தானே? அதுவும் எல்லாமே புஷ்டியையும் சித்த சுத்தியையும் லக்ஷ்மீகரத்தையும் தரும்படியான பயிர்களாகவே இம்மாஸத்தில் விளைகின்றன. பொங்குவதற்குப் பதில் ஆரோக்கியம், செல்வம், மனம், எல்லாவற்றையுமே மங்கச் செய்கிற புகையிலையும் கஞ்சாவும் இந்த மாஸத்தில் விளைவதில்லை! மார்கழி முழுதும் வாசற் கோலத்தில் சாணியில் வைத்த பறங்கிப் பூவும், பூசணிப் பூவும் இந்தப் பூச மாஸத்தில்தான் காய்த்து வருகின்றன. ரூபத்தில் வளப்பத்தைக் காட்ட அவற்றைவிடப் பெரிய காயே இல்லை. அதோடு அவற்றுக்கே இனிப்பு உண்டு. புஷ்டி தருகிற மருத்துவ சக்தி உண்டு. அதனால்தான் கூச்மாண்ட லேஹியம் என்று பண்ணப்படுகிறது.

வளர்ப்போடு இனிப்பும் சேர்ந்த மாஸம் இது. இதற்குப் பெரிய அடையாளமாக, ஸகலத் தித்திப்பு வகைகளுக்கும் ஆதாரமான வெல்லத்தையும் சர்க்கரையையும் தருகிற கரும்பு இப்போதுதான் விளைந்து வருகிறது. மற்றும் சம்பா நெல்லும், துவரை, பயறு, உளுந்து, மொச்சை முதலான புன்செய்த் தானியங்களும் இப்போதே அறுவடையாகி வந்து வளர்ப்பைத் தருகின்றன. இஞ்சிக் கொத்து ஆரோக்கியம். மஞ்சள் கொத்து லக்ஷ்மீகரம், ஸௌபாக்கியம்.

மார்கழிக் குளிரும், நீண்ட இரவுப்போதும் போய் ஸூரியன் மகரப் பிரவேசம் பண்ணியவுடன் இம்மாஸத்தில் சீதோஷ்ணம் ஆரோக்கியமாகவும், ஆத்ம க்ஷேம கரமாகவும் ஆகிறது. 'உத்தராயணம்' என்று இம் மாஸத்தில் தொடங்கும் பாதி வருஷத்தில் ஜீவயாத்திரை முடித்தால் ஜீவன் உத்தமகதி அடைகிறது. இருப்பதற்கு மட்டுமில்லாமல் இறப்பதற்கும் சிலாக்யமான மாஸம்!

இதனாலெல்லாந்தான் நாம் மகிழ்ச்சியில் பொங்கிப் ''பொங்கலோ பொங்கல்'' என்று பண்டிகை கொண்டாடுகிறது.

நாம் மாத்திரம் பொங்குவது போதாது. நம் கால்நடைகளும் பொங்க வேண்டும். நாம் நித்தியம் பொங்கும் அரிசியின் கஞ்சியும் கழுநீரும், தின்கின்ற வாழைப் பழத்தின் ஒவ்வொரு தோலும், நறுக்கும் காய்கறிகளின் தோலும் காம்பும் கால் நடைகளுக்கே போய்ச்

சேரும்படியாகக் கவனத்தோடு செய்தோமானால் கன்று சாகாது. அடிமாடு தோலுக்குப் போகாது. அவற்றுக்காக நாம் அதிகப்படியாகச் செலவு செய்தோ, சிரமப்பட்டோ எதுவும் செய்ய வேண்டியதில்லை. நாம் பிரயோஜனப் படுத்துவதன் கழிவுப் பொருட்கள் வீணாகாமல் அவற்றின் வயிற்றுக்குப் போக விட்டாலே போதும். மாட்டுப் பொங்கல் என்று ஒரே ஒருநாளைக் கொண்டாடிவிட்டால் மட்டும் போதாது.

நம் பசுக்கள், இடையர்கள், உழவர்கள் எல்லோரும் க்ஷேமமாக இருப்பதற்கான தொண்டுகளைத் தினந் தினமும் செய்வோம்.

நாடு மங்கும் பழக்கங்களை விட்டால்தான் பொங்கல் நிஜமான பொங்கலாகும். நம் தேசத்துக்கு என எந்த வைதிக சமய சம்பிரதாயம் யுகாந்தரமாக இருந்து வந்திருக்கிறதோ அதன்படி நடப்பதுதான் நமக்குப் பொங்கல், நம் மூலமாக ஸகல லோகத்துக்கும் பொங்கல். ஸினிமாவும் ஸிகரெட்டும், பொடியும் புகையிலையும், குடியும் குதிரைப் பந்தயமும், சீட்டாட்டமும் பருத்தியாட்டமும் மற்றுமுள்ள விளையாட்டங்களும், காப்பியும், பார்ப்பதற்குப் பளபளப்பாக இருந்து கொண்டே மங்க வைக்கிற பட்டும் வைரமும் மங்கினால் ஒவ்வொரு குடும்பமும் பொங்கி வழியும். போகியன்று சொக்கப்பானை கொளுத்தும்போது நாடு மங்கும்படியான பழக்கங்களைக் களைந்தெறிவோம்.

பொங்கலன்று கதிரவனை வழிபட்டு வலம் வரும்போது, நம் குடியும், நாடும் உலகம் எல்லாமும் பொங்க வேண்டும் என்று வேண்டுவோம். குறைந்த பட்சம் மும்முறை வலம் வந்து ஒவ்வொரு முறையும் இந்தப் பிரார்த்தனையைச் செய்வோம்.

வளர்ப்பும் இனிப்பும் நிறைந்த இந்தத் திருநாளில் நாம் மனப்பாங்கில் வளர்ந்து, அதில் அன்பு என்னும் இனிப்பில் நிறைவோம். ஒரு நாளோ, ஒரு மாஸமோ இன்றி என்றும் இப்படிப் பொங்கிக் கொண்டிருப்போம்.

பொங்கும் மங்களம் எங்கும் தருக!

---

### வாடேகர் வழக்கம்

**அஜித் வாடேகர் முக்கியமான பந்தயங்களுக்கு ஆடச் செல்வதற்கு முன்னால் ஏதாவது புதிய பொருளை வாங்கி அணிந்துகொண்டே ஆடச் செல்வது வழக்கம். ஒன்றும் கிடைக்காவிட்டால் ஒரு பூட்ஸ் லேஸாவது புதுசாக வாங்கிக் கொண்டு பந்தயத்துக்குச் செல்வார்!**

### முதல் டெஸ்ட் முதல் செஞ்சுரி!

**இங்கிலாந்து கோஷ்டிக்கு எதிராக பம்பாய் ஜிம்கானாவில் லாலா அமர்நாத் முதல் செஞ்சுரி எடுத்த பெருமையை நிறுவினார். 1933 டிசம்பரில் நடைபெற்ற இந்த டெஸ்ட் பந்தயம் இந்திய மண்ணில் நடைபெற்ற முதல் அதிகாரபூர்வமான டெஸ்ட்!**

### பூஜ்ய திலகம்!

**இந்தியாவின் ஆரம்ப பாட்ஸ்மன் பங்கஜ் ராய் 1952ல் இங்கிலாந்துக்கு எதிராக ஏழு இன்னிங்ஸில் ஐந்து பூஜ்யங்களை எடுத்த பெருமையைக் கண்டார். அதுவும் நான்கு இன்னிங்ஸ்களில் நான்கு பூஜ்யங்களைத் தொடர்ந்து பெற்றது அவரது தனிச் சிறப்பு!**

## தை வாழ்த்து

உயர்வென்ற ஏணி உச்சி நிச்சயமாம்
உழைத்திடு கையே

ஊறுபல வந்திடினும் சத்தியமாய்
உரைத்திடு மெய்யே

இயல் இசை நாடகம்போல் நித்தியமாய்
வாழ்ந்திடு முறையே

செயல்புரிய மனவுறுதி பக்குவமாய்
வாழ்த்திடு தையே.

- கே. பிரேம்



கணவன்: "எங்க எஜமான் எனக்குத் தீபாவளி இனாமாக இரண்டு ரூபாய் கொடுத்தார்!"

மனைவி: "பொங்கல் இனாமாகன்னு சொல்லு!"

கணவன்: "ஊஹூம்! தீபாவளி இனாம்தான். தீபாவளியிலிருந்து நான் கேட்டுக் கிட்டிருந்ததை இதோ, அதோன்னு இழுத்தடிச்சு பொங்கலான இன்னுதான் கொடுத்தார்!"

- டி. ராஜாஜி

# கிரிக்கெட் கிட்டா!

ஒரே பவுண்டரியா அடிச்சுத் தள்ளுறாரே!

அவரோட மாமியார் அந்தப் பக்கம் உக்காந்திருக்-காங்களாம்!












# உடலின் மேலோடு உள்ள தொல்லையை





# ஆழ்ந்து அகற்றும் களிம்பு—
# அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட்

சாதாரண களிம்புகள் சருமத்தின் ஆழம்வரை எட்டாது. ஆனால் அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட், இதை எட்டும். ஏனெனில், சக்திவாய்ந்த சரும நிவாரணிகளின் அபூர்வக் கலவை இது. சாதாரண சரும நோய்களின் ஆதாரத்தை இது எட்டும்; உடனடியாக அகற்றும்; இயல்பான ஆரோக்கிய சருமத்தை வெளிப்படுத்தும்.




அமிர்தாஞ்சன் டெர்மல் ஆயின்ட்மென்ட், படை, சொரி, மற்றும் பல சரும நோய்களுக்கும் ஏற்ற லட்சிய நிவாரணி. இன்றே ஒன்று வாங்குங்கள்!

**அமிர்தாஞ்சன் லிமிடெட்** 14/15 லஸ் சர்ச் ரோடு, சென்னை 600 004

SAA/AM/1906 R.

# ...சுமங்கலி வந்தாள்

'லக்ஷ்மி'



புதிதாகக் கட்டப்பட்ட அந்தச் சில வீடுகள் தெருவிலிருந்து சென்றதொரு சந்துக்குள் அடங்கியிருந்தன. தெரு முகப்பில்தான் ஒரு விளக்கு. அதனால் இரவில் சந்துக்குள் ஒரே இருட்டு. எல்லா வீட்டார்களும் சேர்ந்து கூட்டு முயற்சியாகப் பாதையைச் செப்பனிட்டுக் கொள்ளவேண்டும். முயற்சி வெற்றி பெறுததினால் சந்தின் பாதை குண்டும் குழியுமாக இருந்தது. அதுவும் மூன்று நாட்களாக விடாது பெய்து கொண்டிருந்த பேய் மழையால் தண்ணீர் முழங்காலுக்கு மேல் தெருவில் நின்று கொண்டிருந்தது.

ஷைலாவுக்கு இதெல்லாம் வேடிக்கையாகத்தானிருந்தது. அவர்கள் வீட்டு வராந்தாவில் நின்றபடி எதிரே தெரிந்த தெருவிலிருந்த அலுவலகத்தின் மதில் சுவரை வெறித்துக் கொண்டிருந்தாள். அந்தச் சுவரில் ஒட்டியிருந்த போஸ்டர்களை அவள் ஒருவிதத்தில் மிகவும் ரஸித்துக் கொண்டிருந்தாள்.

''அவளோட ராவுகள்'' கிழிந்து தொங்கிக் கொண்டிருப்பது புலப்பட்டது. ''வாடகைக்கு ஒரு இதயம்'' போஸ்டரின்மீது யாரோ சேற்றை வாரி வீசி விட்டிருந்தார்கள். ''ரதிநிர்வேதமும்'' 'சத்திரத்தில் ஒரு ராத்திரியும்' அருகருகே போட்டியிடுவதுபோல் புத்தம் புதியதாகக் காணப்பட்டன.

லேசாக இன்னமும் தூறிக் கொண்டிருந்தது. மழையில் மனைவி வெளியே புறப்பட்டுப் போயிருக்கிறாளே என்று கவலைப்பட்டவண்ணம் மகாலிங்கம் வெளியே வந்து எட்டிப் பார்த்தார்.

பேத்தி பார்த்து ரஸித்துக் கொண்டிருந்த சுவரொட்டிகள் அவரது கண்களிலும் பட்டன.

''இதெல்லாம் பார்த்துண்டு ஏன் இங்கே நிக்கிறே?...'' எரிச்சலுடன் அதட்டினார்.

பெல்பாட்டம் – டாப்ஸ் அணிந்த பேத்தி ஷைலா. டெல்லி வாசி. தாற்காலிகமாக மூன்று ஆண்டுகளுக்கு அவள் தந்தை வேலையை ஒப்புக் கொண்டு மனைவியுடன் ஜாம்பியா நாட்டுக்குப் போயிருந்தார். டெல்லிக் குடித்தனம் கலைக்கப்பட்டு ஒரே பெண்ணான ஷைலா படிப்பை மேலே தொடரச் சென்னைக்கு – கோடம்பாக்கத்திலிருந்த தாத்தா வீட்டிற்கு வந்திருந்தாள்.

''பார்த்தால் என்ன தப்பு தாத்தா? சாதாரண விஷயம்?''

அவளுக்குப் பதில் சொல்ல அவரால் ஆகவில்லை. இடையே அப்படி ஒருதலைமுறைப் பிளவு – அவர்களைப் பிரித்துக் கொண்டு நின்றது. மிகவும் செல்லமாக அவள் போன போக்கில் வளர்க்கப் பட்ட பெண் அவள். டெல்லி நாகரீகத்தின் உயர்மட்டத்திலே உட்கார்ந்திருந்தாள்.

அவள் என்னென்னவோ புத்தகங்களைப் படித்தாள். தொலைபேசியில் தெரிந்த சென்னைத் தோழிகளுடன் நகத்தைக் கடித்துக் கொண்டு அவள் என்னென்னவோ விஷயங்களைக் கூச்சமின்றி, பயப்படாமல் அவர் காதுபட இரைந்து மணிக்கணக்கில் பேசிய போது – அவர் மூக்கும் முகமும் சிவந்து – நெஞ்சு படபடக்கத் தமது அறைக்குள் சென்று கதவைச் சாத்திக் கொள்ளத்தான் முடிந்தது. பதினேழு வயது குமரிப்பெண் ஷைலா – பொதுபொதுவென்று வாழைப் போத்து போல வளர்ந்து நிற்கிறாள். பாட்டி தாத்தாவிடம் என்ன பேசுவது என்ற விதரணையே இடையாது. எதற்கெடுத்தாலும் சிரிப்பு – வேடிக்கை. பேசத்தான் தெரியவில்லை – ஒழியட்டும் ஒரு புடவை கூடவா .ழகாகக்



கட்டிக் கொள்ளத் தெரியாது? எப்போது பார்த்தாலும் பெல்பாட்டம் — மாக்ஸி, கராரா — இந்தக் சன்னராவிகள்தானா?

''பார்வதி மத்தியானம் வெளியே போனவள். போன வாரம் முழுவதும் அவளுக்கு இருமலும் ஜுரமுமாக இருந்தது... இந்தப் பிசுபிசு மழையிலே பிடிவாதமா போயிருக்கா'' தாத்தா ஒரு பெருமூச்சு விட்டபோது... தெருவிலிருந்து ஒரு ரிக்ஷா சந்துக்குள் நுழைவது தெரிந்தது. ரிக்ஷாவுக்குள் பிளாஸ்டிக் தடுப்புக்குமேல் தெரிந்த பார்வதியின் தலையைக் கண்டதும்தான் அவருக்கு நிம்மதி. உள்ளே திரும்பினார்.

பார்வதி வண்டியிலிருந்து இறங்கினாள். சன்னமாகப் பெய்து கொண்டிருந்த மழை இப்போது முற்றிலும் நின்று விட்டிருந்தது. ரிக்ஷாக்காரனுக்குச் சில்லறையை எண்ணிக் கொடுத்து விட்டுக் கனமான துணிப்பையை ஒரு கையிலும் மற்றொரு கையில் புடவை பார்சலுமாக உள்ளே வந்தாள். இதெல்லாம் நான் வாங்கிண்டு வர மாட்டேனா''? கடிந்து கொண்ட மகாலிங்கம் பையைச் சட்டென்று அவள் கரத்திலிருந்து வாங்கிக் கொண்டார்.

விரலைக் கடித்துக் கொண்டிருந்த பேத்தி அவசரமாக அருகில் ஓடி வந்தாள். குனிந்து பைக்குள் இருப்பதை நோட்டம் விட்டாள்.

''ஒரு வாழைப்பழம் நான் எடுத்துச் சாப்பிடலாமா பாட்டி?''

அவள் கேட்டு முடிக்குமுன் அரண்டு போன பார்வதி கணவன் கையிலிருந்த பையை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு சாமான் அறைக்குள் மறைந்து விட்டாள்.

''ஒண்ணு எடுத்துச் சாப்பிட்டா என்னவாம்? பாட்டி ஏன் இப்படி பயப்படறா?'' வேடிக்கையாகக் கேட்ட ஷைலா சிரித்தாள்.

''அதெல்லாம் நாளை நடக்கப் போகும் சுமங்கலிப் பிரார்த்தனைக்கு வச்சிருக்கு — எச்சக்கையோட தொடறது தப்பு..''

''தாத்தா நீங்க இதை எல்லாம் நம்பறேளா?..'' பேத்தி ஏளனமாகக் கேட்டாள்.

''நம்பறேன் அம்மா. பல வருஷங்களாகச் செய்து கொண்டு வருகிற ஒரு பிரார்த்தனை. இறந்தவங்களை மறக்காம நன்றியோட நினைக்க முடிகிறதே என்று எண்ணும்போதே மனசில் ஒரு தெம்பு ஏற்படறது. அவ்வளவுதான்...''

அதற்குமேல் அவளுக்கு விளக்கம் கொடுக்கப் பிரியமில்லை. மௌனமானார்.

அன்று இரவு ஷைலா முன்னதாகவே உறங்கப்போய்விட்டாள். பார்வதிதான் வாங்கிவந்த புடவையைக் கணவரிடம் பிரித்துக் காட்டினாள். ஒவ்வோராண்டும் கல்யாணமானவுடன் சின்ன வயதிலேயே காலமாகி விட்ட தனது மூத்தாளுக்கு அவள் சுமங்கலிப் பிரார்த்தனை செய்வது வழக்கம். ஒவ்வொரு ஆண்டும் அந்தப் புடவையைத் தன் ஒன்று விட்ட நாத்தனார் சியாமளிக்குத்தான் கொடுப்பதும் வழக்கம். இரண்டு ஆண்டுகளாகச் சியாமளி பிரார்த்தனைக்கு வர ரொம்பவும் பிகு செய்தாள். அவள் கணவனுக்குத் திடீர் என்று யோகம் அடித்து விட்டிருந்தது. தூரத்து உறவு மாமா ஒருத்தர் மண்டையைப் போட்டுத் தமது சொத்து அனைத்துக்கும் அவனை வாரிசு என்று நியமித்து விட்டுப் போயிருந்தார். திடீர் பணம் அவர்களுக்குக் கௌரவத்தை உண்டாக்கி விட்டிருந்தது.

முன்னறையில் தான் பிரார்த்தனை செய்வதாக ஏற்பாடு — அதைப் பெருக்கிக் கழுவித் துடைத்துக் கோலமிட்டுத் தயாரித்தாள். மணையைக் கழுவி மாக்கோலம் போட்டு ஒரு பக்கம் வைத்தாள். வாங்கி வந்த பழம் பாக்கு வெற்றிலை — குங்குமம் — மஞ்சள் இத்யாதிகளை எடுத்து ஒரு பெரிய தட்டில் தயாராகக் கொண்டு வந்து முன்னறை மேஜைமீது வைத்தாள். சுவரிலே தொங்கிய தன் மூத்தாளது படத்தைத் துடைத்துப்பொட்டிட்டு வாங்கிவந்த பூமாலையை அதற்குச் சூட்டினாள். குத்து விளக்கில் எண்ணெயை



விட்டுத் திரிபோட்டுப் பாட்டி — தயாராகப் படத்தின் கீழே மணைக்கு அருகில் வைத்தாள்.

மனைவிக்குத் துணையாக முன்னறையிலே பத்திரிகையுடன் உட்கார்ந்திருந்த மகாலிங்கம் மனம் கனிந்து போனார்.

பார்வதிக்குத் தங்கமான மனம். மூத்தவள் என்று இறந்துபோன மங்களத்தின் மீது அவளுக்குத் துளிக்கூடப் பொறாமையே கிடையாது. சிறுவயதிலே பூவும் பொட்டுமாகப் போய் விட்ட அந்த மகராசி தெய்வமாக நின்று அந்தக் குடும்பத்தைக் காத்து வருகிறாள் என்று அகற்ற முடியாத ஆழமான ஒரு நம்பிக்கை, பக்தி...

புடவையை அவரிடம் காட்ட அருகில் வந்த பார்வதி தயக்கத்துடன் நின்றாள்.

'அக்கா ரெண்டு நாளா என் ஸ்வப்பனத்திலே வந்துண்டு இருக்கா. பிரார்த்தனையைப் பற்றி நினைவுபடுத்தறாப் போல் தோணித்து. அதனாலே வழக்கம்போல் தை முதல் வெள்ளிக்கிழமையே பண்ணிடலாம்னு முடிவு செஞ்சுட்டேன். ஆனால் எப்பவும் போலப் பட்டுப் புடவைதான் இந்த வருஷம் வாங்க முடியலே. அதனால்... இந்தக் கைத்தறி நூல் புடவையை வாங்கிண்டு வந்தேன்.'' பிரித்துப் புடவையைக் கணவரிடம் காட்டினாள்.

''சிகப்புப் புடவை, பச்சைக்கரை. நன்றாக இருக்கே!''

பார்வதி பெருமூச்சு விட்டாள். முன்போல் இப்போது அவர்களிடம் பணவசதி இருக்கவில்லை. வேலையிலிருந்து அவள் கணவர் ஓய்வடைந்ததும் பல விஷயங்களில் அவள் சிக்கனத்தைக் கடைப்பிடிக்க நேர்ந்தது.

''நேரே போய்ச் சியாமளியைக் கூப்பிட்டு விட்டு வந்தேன். அவ என்ன கிட்டக்கவா இருக்கா? அண்ணாநகர், பஸ்ஸில் போய் வர்றதுக்குள்ளே ஒரு யுகம்போல் இருந்தது.''

அவள் முடிக்குமுன் தொலைபேசி கிணுகிணுத்தது. எழுந்து சென்று மகாலிங்கம் எடுத்தார். மறுமுனையில் சியாமளி பேசினாள்.

அவசரமாக அவள் பார்வதியை அழைத்தாள். ''அத்தை நீங்களன்னை ரொம்ப மன்னிக்கணும். மழை இந்தப் பக்கம் கொட்டோ கொட்டுனு கொட்டறது. எனக்கும் ஒரே தலைவலி. ஜுரம் கூட லேசா அடிக்கிறது. அதனாலே என்னால நாளைக்கு வரமுடியாது போலத் தோணறது. வேறே யாரையாவது வச்சு எல்லாத்தையும் முடிச்சுக்கோங்க...''

''சியாமளி இப்படிக் கடைசி நிமிஷத்துல காலைவாரி விட்டுட்டாளே. ஒரே ஒரு சுமங்கலிதானே வச்சுப் பூஜை பண்றேன். இப்பக் கடைசி நிமிஷத்துல யாரைக் கூப்பிடுவேன்?''

மகாலிங்கம் பதிலுக்கு உரக்கச் சிரித்தார். ''போகட்டும். அந்தத் திமிர்ப் பணக்காரி கௌரவம் பாக்கறா. விடியற்காலையிலேயே நான் வெளியே போய், முன்னே நம்மகிட்ட வேலை பார்த்தாளே விசாலம், அவளைக் கூட்டிண்டு வரேன்.''

பார்வதியால் சட்டென்று அமைதியடைய முடியவில்லை. வெகுநேரம் புரண்டு புரண்டு படுத்தவள், தன்னையுமீறிய அசதியில் அயர்ந்து விட்டாள்.

எல்லோருக்கும் முன்னே தூங்கப் போனவள் ஷைலா. முன்னறை கடிகாரம் நான்குமுறை அடித்ததும் அவளுக்கு விழிப்பேற்பட்டு விட்டது. படுக்கையறையினின்று எழாமல் சிறிது சோம்பலுடன் விழித்தபடி படுத்துக் கிடந்தாள்.

தாத்தாவின் அறையிலிருந்து பலத்த குறட்டை. பாட்டி பெஞ்சியின் மீது சுருண்டு உறங்கிக் கொண்டிருந்தாள். அவள் மெல்ல முன்னறைக்கு வந்து சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நின்றாள். திடீரென அமைதியைக் கிழித்துக் கொண்டு ஒரு பெண்ணின் அலறல்...! திடுக்கிட்டு ஜன்னலைத் திறந்து வெளியே பார்த்தாள்.

யாரோ ஓர் இளம்பெண். மழையில் நனைந்திருந்தாள். அவளைத் தொடர்ந்து வந்த ஒரு முரடன் அவள் சேலையைப் பிடித்து இழுக்க, அவள் அலறுவது மட்டும், காற்றிலே லேசாகக் கேட்டது. கண்கள் அந்தப் பயங்கரக் காட்சியைக் கண்டன. உடல் கிடுகிடுவென ஆட நெஞ்சு படபடத்தது அவளுக்கு. இரக்கத்தில் உள்ளம் கரைந்தது. அவளையுமறியாத துணிச்சல் உந்த, சட்டென வாயிற் தாழ்ப்பாளை





பாஸ்கர்: கிரிக்கெட் பற்றி நினைத்தாலே எனக்கு ராமசாமி ஞாபகந்தான் வரும்!
குமார்: அவர் என்ன பெரிய பிளேயரா?
பாஸ்கர்: அவரிடம் கிரிக்கெட் பற்றிப் பேசிக் கொண்டிருந்தேன். "காலால் தட்டிக் கொண்டே ஓடுவார்களே அந்த விளையாட்டைப் பற்றித்தானே சொல்லுகிறீர்கள்" என்று கேட்டவராக்கும் அவர்!

ரா. ஜெயராமன்.



நீக்கிக் கதவைத் திறந்துகொண்டு வராந்தாவிலே வந்து நின்றாள். தயங்கியபடி மேலே என்ன செய்வது என்று அவன் யோசிக்குமுன் அந்தப் பெண் ஒரே ஓட்டமாக அவளைப் பிடித்து இழுத்துக்கொண்டு அந்த வீட்டின் முன்னறைக்கு வேகமாக வந்து நின்றாள். மின்னல்போல் கதவைச் சாத்தித் தாளிட்டு விட்டு அதன்மீது சாய்ந்துகொண்டு அழுதாள்.

அதிர்ந்து போன ஷைலா விழிப்புற்று அவளைக் கவனித்தபோது துணுக்குற்றாள். அந்தப் பெண்ணின் நனைந்த உள் பாவாடையும் கிழிந்த ரவிக்கையுமாக அரை நிர்வாண நிலையில் அலங்கோலமாக நின்றாள்.

''பாவி! என்னை ரொம்ப நேரமா துரத்திட்டு வரான். எலெக்ட்ரிக் டிரயினு முதல் வண்டி பிடிச்சு, தாம்பரத்திலே இறங்கிப் போகணும்னு புறப்பட்டேன். எங்க வீட்டுக்காரர் அங்கேதான் கட்டட வேலை செய்யறாரு. வீட்டுக்குப் போய்ட்டு ஒருநடை பாத்திட்டு விடியற்காலையிலே வான்னு அனுப்பினாரு. இந்தப்பய அங்கே நின்னாரு. குடிச்சிருப்பான் போல இருக்குது. என்னை, என்னை இப்படி... சேலையைப் பிடிச்சு... மானம் போகாம தப்பி ஓடிவந்திட்டேன். காப்பாத்துங்கம்மா.''

ஷைலாவுக்கு என்னவோ செய்தது. 'ஏழைமையில் வாழும் பெண். அவளுக்கும் இப்படி ஒரு ஆபத்து வெளி உலகில்? பிரமிப்புடன் தன்னை அறியாத இரக்க உணர்ச்சியுடன் மேஜைமீது வைத்திருந்த நூல் சேலையை எடுத்து அவளிடம் நீட்டினாள். பரபரப்புடன் அந்தப் பெண் அதை உடுத்திக் கொண்டு விட்டாள்.

பேச்சுக்குரல் கேட்டு விழிப்படைந்த தாத்தாவும், பாட்டியும் முன்னறைக்கு வந்த போது பாட்டி 'வீல்' என்று கூவினாள்.

''அம்மா! உங்களைக் கையெடுத்துக் கும்பிடறேன். நீங்க நல்லா இருக்கணும். உங்க குழந்தை கதவைத் திறந்து என்னை உள்ளே விட்டிருக்காட்டி இத்தனைநாழி நான் என்ன கதியாகியிருப்பேனோ தெரியாது...''

''ஷைலா "என்ன காரியம் பண்ணிட்டே? சுமங்கலிப் பிரார்த்தனைக்கு வாங்கியிருந்த புடவையை எடுத்து — அடகடவுளே...''
அதிர்ச்சி தாள முடியாது பார்வதி... உரக்கக் கத்திவிட்டாள், மாலையாக அவளது கன்னங்களில் கண்ணீர் வழிந்தது.

''உஸ் பார்வதி... கத்தாதே—அழாதே. அமைதியாகக் கேளு. பிரார்த்தனைக்கு ஒரு சுமங்கலி வேணும்னு சொன்னே இல்லையா?'' மகாலிங்கம் அதட்டினார்.

''சொன்னேன். இவள் யார் தெரியுமா? கட்டிட வேலை செய்கிற சித்தாள். காளியப்பன் பெண்சாதி வள்ளி?...''

''வள்ளி ஒரு ஹரிஜனப் பெண். அவளுக்கு இந்தப் புடவையைக் கொடுத்துட்டாளே பேத்தின்னுதானே அதிர்ந்து போயிட்டே...? பார்வதி நீ தேடிக் கொண்டிருந்த அந்தச் சுமங்கலி இந்த உருவத்திலே தானே வந்து புடவையை எடுத்துண்டுட்டா... இது தெய்வச் செயல்... சந்தோஷப்படு. தட்டிலே வச்சிருக்கிற பழம்பாக்கு வெத்தலையை இவளுக்குக் கொடுத்து. வயிறு நிறைய டிபனைப் போட்டுக் கைச்செலவுக்குப் பத்து ரூபாயும் கொடுத்து அனுப்பு.''

கண்களில் வழிந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள் பார்வதி. அவள் நிமிர்ந்து பார்த்தபோது மங்களத்தின் போட்டோமீது சாத்தப்பட்டிருந்த பூமாலை தொப்பென்று மேஜையின்மேல் தானே நழுவி விழுந்தது.

''மங்களம் கூட உத்தரவு கொடுத்துட்டா. என்ன முழிக்கிறே?'' கணவர் அதட்டல்போட்டதும் அவள் சட்டென்று பீரோவைத் திறந்து பத்து ரூபாயை எடுத்துத் தட்டின் மீது வைத்து வள்ளியிடம் நீட்டினாள்.

''எடுத்துக்கோம்மா வள்ளி. வெள்ளிக்கிழமை காலை — வாசலைத் தாண்டி வந்திருக்கும் சுமங்கலி நீ — நாங்களெல்லாம் க்ஷேமமாக இருக்கணும்னு வாழ்த்து...'' தழுதழுத்தது அவள் குரல்.

''தாத்தா.. உங்களுக்கு இப்படி ஒரு புரட்சிகரமான சிந்தனையா?'' ஆச்சர்யப்பட்டாள் ஷைலா.

''பேச்சில்தான் அம்மா உன் புரட்சி! அலங்கோலமான படங்களைப் பார்த்து அச்சமும் அருவருப்பும் ஏற்படாத உன் மனம் ஒரு பெண்ணுக்கு உண்மையிலே ஏற்பட்ட அலங்கோலத்தைப் பார்த்ததும் எப்படிப் பதைபதைக்கப் போய்விட்டது.? இதுதான் அம்மா... நாணம் எனும் உயர்ந்த உணர்வு. மனிதப் பிறவிக்குத் தேவையான முக்கியமான உணர்வு... நல்லவேளை இந்தச் சுமங்கலி வந்தாள். உன்னையும் நான் புரிந்துகொள்ள முடிஞ்சுது. இப்போ என் மனசில் நிம்மதி...'' தாத்தா பேத்தியை அளவற்ற பெருமையோடு பார்த்தார்.

# வட்டமேஜை

◉ மனத்தில் முதலிடம் சிவசங்கரியின் ''விபத்து'' கதைக்குத்தான். இந்திய மனிதனிடம் நாம் அடிக்கடி காணுகிற ஒரு குறைபாட்டை எவ்வளவு இயற்கையாகப் படம் பிடித்துள்ளார்! வாசந்தியின் 'திரப்படாத கதவுகள்' வேலைக்குப் போகிற பெண்கள் பெரும்பாலும் பணம் பண்ணும் மெஷின்களாக மாறுவதையும், இந்துமதியின் 'பார்வைகள்' இல்வாழ்வில் ஒரு பெண்ணின் மிக தர்மசங்கடமான நிலையையும் வெகு இயல்பாகக் காட்டுகின்றன.

இவற்றோடு ஒப்பிடுகையில் ''அர்த்தநாரி'' முழுநாவல் போதிய திருப்தியை ஏற்படுத்தவில்லை.

சென்னை—44 பாலசங்கரி

◉ முழுநீள நாவல் 'அர்த்தநாரி', வெகு பிரமாதம். யார் இந்தச் செம்பியன்? இவ்வளவு பிரமாதமாக எழுதுகிறாரே.

வள்ளியூர் ஜெ. மீனாம்பிகை

◉ 'அர்த்தநாரி'யில் உணர்ச்சிகளின் மொத்த வடிவினளாய்ப் புஷ்பாவைப் படைத்துப் பல்லாயிரக் கணக்கான வாசகர்களை உணர்ச்சிப் பெருக்கெடுத்துக் கண்ணீர் விட வைத்து விட்டார் செம்பியன்.

சென்னை—42 சாரங்க. குப்புசாமி ராவ்

◉ 'அர்த்தநாரி' முதலில் அருவருப்பு
இடையில் பரபரப்பு
முடிவில் மெய்சிலிர்ப்பு

திருநெல்வேலி கோ. கதிரவன்

◉ ஒரே மூச்சில் படித்த பின் தான் வைத்தேன். மிகவும் அருமையான கதை. புஷ்பா, மதனன், அர்த்தநாரி என்ற மூன்றே பாத்திரங்களைச் சுற்றி, இவ்வளவு பக்கங்களுக்கு அலுப்புத் தராத வகையில் மனத்தின் உணர்வுகளைச் சுண்டியிழுக்கும் வண்ணம் ஆழ்ந்த கருத்துக்களோடு, தெளிவான நடையில் எழுதிய கதாசிரியருக்குப் பாராட்டுக்கள்.

சென்னை—5 பானுமதி பாஸ்கரன்

◉ சிக்மகளூரைத் தம் வாழ்நாளிலே முதன் முதலாக இந்திராகாந்தி 1978 அக்டோபர் 6—ந்தேதி அன்றுதான் பார்த்தார் என்பது அபத்தம். தவறான தகவலை 'இந்தியா டுடே'யில் இருந்து எடுத்துப் பிரசுரித்துள்ளீர்கள். திருமதி இந்திரா காந்தி 1971—ஆம் ஆண்டு பிப்ரவரி 15—ந்தேதி வியாழன் அன்று மாலை 4—00 மணிக்கு (பிரதமராக இருந்தபோது) ஹெலிகாப்டரில் வந்து இறங்கினார்.

சிக்மகளூர் ராதா தண்டபாணி

◉ ஏமாந்தது வினோபாபாவே அல்ல. கல்கி ஆசிரியர்தான். பூதானம் கொடுக்கப் பட்டுள்ளது 17 ஆயிரம் ஏக்கர் அதிலிருந்து எப்படி 12 லட்சம் ஏக்கர் நிலம் இருக்குமிடம் தெரியாது போகும்?

சென்னை—41 பி. சத்தியமூர்த்தி

(12 ஆயிரம் என்று திருத்திக்கொள்ளவும். தவறுக்கு வருந்துகிறோம். ஆ-ர்)

# கிரிக்கெட் கற்கலாம்!

19

கரை:
கே. சந்திரசேகர்

படம்: ராஜு.. தொகுப்பு: குன்டுமணி

## பாட்ஸ்மனுக்குச் சில யோசனைகள்



ஒவ்வொரு பாட்ஸ்மனும் வலைக்குள் நின்று கொண்டு ஒவ்வொரு வகை பௌலிங்கையும் ஆடி நன்கு தேர்ச்சி பெற வேண்டும்.





பெவிலியனிலிருந்து விக்கெட்டுக்கு நடக்கும் போது ஒவ்வொரு ஆட்டக்காரரும் நிழலிலிருந்து திடீர் வெளிச்சத்துக்கு நடக்கிறார். அப்பொழுது கண்கள் அதற்கேற்பச் சரியாகி இயங்க ஏதுவாக கிரீஸுக்கு மெதுவாக நடக்க வேண்டும்.



ஒவ்வொரு பாட்ஸ்மனும் முதலில் எந்த வகை பௌலிங் வீசப்படுகிறது என்று கணித்துக் கொண்டு ஆட வேண்டும். பீல்டிங் அமைப்பைப் பார்த்தே பௌலரின் பந்து வீச்சை எடை போட்டு விடலாம்.



பௌலரிடமிருந்து பந்து வீசப்பட்டு விட்டால் பாட்ஸ்மன் முழு சிந்தனை, பார்வை அனைத்தும் பந்தை உற்று நோக்குவதிலேயே இருக்க வேண்டும். இல்லாவிட்டால் விக்கெட் பறி போய் விடும்..

# மும்முனைகள்

## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 5

அந்தப் பெண் சத்யாவை மேலும் கீழுமாக ஒருமுறை பார்த்தாள். பிறகு கரத்தை உயர்த்தி ஆள்காட்டி விரலால் அவன் நெற்றியைத் தட்டினாள். ''நான் ஜோசியம் சொல்லட்டா? உனக்கு மனசு சரியில்லே. உன் நண்பனைக் கட்டிண்டு அழ வந்திருக்கே! ஜஸ்ட் மை பேட் லக்!''

''திரும்பிப் போய் விடவா?'' என்றான் சத்யா.

''அதைச் செய்யேன்! உனக்குப் புண்ணியமாய்ப் போகட்டும். எங்களுடைய இந்த ஈவினிங்கைக் கெடுத்து விடாதே!''

''நித்யா, டோண்ட் பி ஹார்ட்லெஸ்! நகர்ந்து அவனுக்கு வழியைவிடு!'' என்றான் ஆனந்த். ''அவன் நல்ல பையன், உன்மேல் பட்டுக்காமத்தான் உள்ளே வருவான்.''

அவள் நகர்ந்து கொண்டாள்.

''அவர் என்னைக் கேட்டதால் திரும்பிப் போகச்சொன்னேன். நீங்களாயிற்று உங்க நண்பராயிற்று, எனக்கென்ன வந்தது? என் இஷ்டப்படி இங்கே என்ன நடக்கிறது?'' அவள் உதடுகளைக் குவித்தாள்.

''பாருடா சத்யா! நித்யா வருத்தப்படும்படி நடந்துக்கறே நீ. கம் ஆன்! சீர் அப்!''

சத்யாவுடைய மனபாரம் அதிகரித்ததேயொழியக் குறையவில்லை. புகை மண்டலத்தினூடே நடந்து அவன் தன் நண்பன் அருகே பொத்தென்று சோபாவில் விழுந்தான்.

''நித்யா! கிவ் ஹிம் எ டிரிங்க், அண்ட் சீர் ஹிம் அப்'' என்றான் ஆனந்த்.

''நோ! நோ! எனக்கு டிரிங்க் வேண்டாம்.''

''நீயும் சந்தோஷமா இருக்கமாட்டே, என்னையும் சந்தோஷமா இருக்க விடமாட்டே, நித்யா வருத்தப் படறதிலே என்ன தப்பு?''

''சந்தோஷம்னு குடியும் கும்மாளமும்தானா?''

''வேறு என்ன?'' என்று கேட்டாள் நித்யா. ''கவிதைப் புத்தகம் வேணுமா?''

சத்யாவுக்குக் கோபம் வந்தது. ''இந்தா, நீ ஓமர் கய்யாமில் அந்த ஒரு வரியை மட்டும் கேள்விப்பட்டிருக்கேங்கிறது எனக்குப் புரிஞ்சு போச்சு, போதும்'

''உனக்குச் சந்தோஷம்னு தோணறது எது? அதைத்தான் சொல்லேன்?'' என்றான் ஆனந்த்.

''ஏங்க! பேட்ஸ்மேன் இரண்டு பந்தை அடித்தாரே எப்படி?''
''ஒன்று பௌலர் போட்டது இன்னொன்று உங்க அம்மா செய்த பொங்கல் உருட்டி நான் போட்டேன்.''

—கிட்டு.



''மனம் விட்டுப் பேசக்கூடிய நல்ல நட்புறவு, கருத்து வேற்றுமைகள் இருப்பினும் கலங்காத ஆழ்ந்த காதல், சாதனை புரிகிறேம் என்ற எண்ணத்தைத் தரும் உத்தியோகம்...''

''உன் காதலி!... அவ பேரு என்ன?... பிங்கியா?'' — ஆனந்த் கேட்டான்.

நித்யா சிரித்தாள். ''பன்றிக்குட்டிக் கூட அழகாய்த்தான் இருக்கும் பார்க்க — சீமைப் பன்றி!''

சத்யா அவளை முறைத்துப் பார்த்தான். ''வில் யூ ஷட் அப்?''

''நோ'' என்ருள்.

''அவ பேரில் ஏன்டா பாயறே? தப்பாச் சொன்னது நான். இன்னும் ஒரு டிரிங்க் உள்ளே இறங்கிரு இன்னும் கூடப் பிரமாதமா உளறுவேன். நீ உன் காதலி பற்றிப் பேசு. உன் மனச் சோர்வுக்கு அதுதான் மது!''

''அவ பேரு பிரமீளா. குழந்தைப் பிராயத்திலேயிருந்து பிங்க் நிற உடைகளை நிறையப் போட்டுப் பார்த்திருக்கா. இப்பவும் அந்த நிறத்திலே அவளுக்கு மோகம் விடலே. அதனுலே எல்லாரும் செல்லமா 'பிங்கி'ன்னு கூப்பிடறு.''

''ஏதோ பூனைக்குட்டிக்குப் பேர் வைச்ச மாதிரி இருக்கு'' என்ருள் நித்யா.

சத்யா அவளை மீண்டும் முறைத்தான். அதற்குள் ஆனந்த் அவன் கவனத்தைத் திருப்பினுன். ''ரொம்ப இன்டலிஜென்ட் கேர்ல், இல்லே?''

''ஓ! ஷி இஸ் ஃபுல் ஆப் ஐடியாஸ்!'' என்ருன் சத்யா.

''நான்கூட ஃபுல் ஆப் ஐடியாஸ்தான்'' என்ருள் நித்யா கண்களைச் சிமிட்டி.

''எண்ணங்கள் எல்லாரிடமும்தான் தோன்றுகிறது. அவரவருடைய அறிவுக்கு ஏற்ற மாதிரி எண்ணங்களின் தரம் அமைகிறது.''



''பிங்கிக்கு ஃபேவரிட் சப்ஜெக்ட் என்ன?'' என்று ஆனந்த் கேட்டான்.

''உமன்ஸ் லிப்! எப்பப் பாரு, உமன்ஸ் லிப் பற்றிய பேச்சுதான்!''

''எனக்குக் கூட உமன்ஸ் லிப்லே ரொம்ப நம்பிக்கை உண்டு. நான் பிரா போட்டுக் கறதே இல்லை'' என்றான் நித்யா.

''ஏண்டா இவ வாயை மூடவே மாட்டாளா?'' என்று பொறுமை இழந்து கேட்டான் சத்யா.

''மாட்டாள். பேசாம வாயை மூடிண்டிருந்தால் சேரியட் ரெஸ்டாரண்டுக்கு அழைச்சுண்டு போக மாட்டேன்னு சொல்லியிருக்கேன். அங்கே இன்றைக்கு நூறு ரூபாயாவது செலவாவது சாத்தியம்னு இப்போ இருக்கிற நிலைமையை வைச்சுப் பார்த்தாத் தோணறது.''

''எனக்கு ஹஸ்பண்ட் வந்தால்...''

''வரமாட்டான். கவலைப்படாதே!''

''உனக்கு சிவஸ்ரின்னு தெரியுமா?''

''இந்தியாவிலே யாருக்குமே தெரியாது! பால்லிவாலா அமெரிக்க ஜனாதிபதியின் அம்மா காலை அளவெடுத்தார் என்கிறதுக்காக அவரைத் திட்டிய தேசம் இது!''

''என் ஹஸ்பண்டைப் பற்றி நான் சொல்ல விட மாட்டீங்களா?'' என்று கெஞ்சினாள்.

''சொல்லு! சொல்லு!'' என்று ஆனந்த் அவளைத் தட்டிக் கொடுத்தான்.

''என் புருஷன் பார்ட்டிகளில் வேறு பெண்களைப் பார்த்துச் சிரித்தால் நானும் வேறு ஆண்பிள்ளைகளைப் பார்த்துப் புன்னகை புரிவேன்! 'ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக வாழ்வோம் இந்த நாட்டிலே'ன்னு பாரதி சொல்லியிருக்கார்.''

''எப்படிடா இவளைச் சகிச்சுக்கறே நீ?'' என்றான் சத்யா நம்பவே முடியாமல்.

''இவளோட அசட்டுத்தனம்தான் இவளோட மிகப்பெரிய சொத்து!'' என்றான் ஆனந்த். ''அடுத்தாற்போல் இவளுடைய அழகு. மூன்றாவது அதை வாரி வழங்க இவள் தயாராயிருப்பது. இந்த மாதிரி அச்சுப்பிச்சுப் பேச்சுக்கு நான் பதில் சொல்ல வேண்டாம். கேட்டுச் சிரிச்சுட்டுப் போயிடலாம். 'எவ்வளவு அழகாப் பேசறே!' என்று பாராட்டக் கூடச் செய்யலாம். ஆனால் புத்திசாலி கேர்ல் ஃபிரெண்ட் எப்பவும் கழுத்தறுப்புத்தான். அவ புத்திசாலித்தனத்துக்கு ஒரு படிமேலே நாம நம்மோட சாமர்த்தியத்தைக் காட்டியாகணும். வாதங்களில் விட்டுக் கொடுக்காம ஜெயிச்சாகணும். ரொம்பக் கஷ்டம். போதும் போதும்னு ஆயிடும், கோபம் கோபமா வரும். அப்புறம் உன்னைப்போல சதா சோகமா இருக்க வேண்டியதுதான்!''

சத்யா எழுந்து விட்டான். ''சரி, நான் கிளம்பறேன். இந்த இடம் எனக்கு லாயக்குப் படாது; இனிமே ஃபோன் பண்ணி நீ தனியா இருக்கியான்னு, தெரிஞ்சிண்டு வரேன்.''

''போயிட்டு வா, சத்யா! ஆனா ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க; வாழ்க்கையை ரசிக்க நீ இன்னும் கற்றுக் கொள்ளலை. உனக்கு ரசிக்க ஆசையா இருக்கு. ஆனா பயமாகவும் இருக்கு. ஓவர் கம் தட் ஃபியர்!''

''பயத்தைப் போக்க நான் வேணும்னா என்னாலான உதவி பண்ணறேன்'' என்றாள் நித்யா.

''இது சாதாரண ஜோக் இல்லே எக்ஸார்லிஸ்ட் ஜோக்'' என்றான் சத்யா, நடுங்குவது போல் நடித்து.

''நீ எதிர்பார்க்கிற சந்தோஷமும் ரசனையும் வேறு என்கிறது எனக்குப் புரிகிறது சத்யா. ஆனா அது எல்லாருக்கும் சுலபத்திலே கிடைக்கிற விஷயமில்லே. ஒருவித லட்சிய இன்பத்தை நீ நினைச்சுண்டிருக்கே. இதிலே தோல்விகள்தாம் அதிகம் ஏற்படறது.''

சத்யாவுக்கு அருவருப்பாயிருந்தது. 'நான் இங்கே வந்ததே தப்பு' என்று நினைத்துக் கொண்டான். 'நேரே பிங்கியைப் பார்க்கப் போயிருக்க வேண்டும்!' ஸ்கூட்டரைக் கிளப்பி மைலாப்பூரிலேயே ஒரு பாஷ் லொகாலிடியில் இருந்த அவள் வீடு நோக்கிச் சென்றான்.

அங்கும் அவனுக்கு ஏமாற்றம்தான் காத்திருந்தது. சமையல்காரன் கேட் விளக்கு வெளிச்சத்தில் மாலைப் பத்திரிகை படித்துக் கூர்க்காவுக்கு அரைகுறை ஹிந்தியில் விளக்கிக் கொண்டிருந்தான். கூர்க்கா தனக்குப் புரிந்தது என்ன என்பதை அரைகுறைத் தமிழில் சமையல்காரனுக்குத் திருப்பிச் சொல்லிக் கொண்டிருந்தான்.

அவர்களிடமிருந்து, பிங்கி, 'ஸோஷியல் ஸர்விஸ் காம்ப்' போயிருப்பதாகவும் அவளுடைய பெற்றோர்கள் சினிமாவுக்குப் போயிருப்பதாகவும் தெரிந்து கொண்டான். அவர்களில் யார் முதலில் வந்தாலும் தான் வந்து போனதாகச் சொல்ல வேண்டும் என்று கூறிவிட்டு ஸ்கூட்டரைத் திருப்பினான் சத்யா.

## அத்தியாயம் 6

கேஸட் ரிகார்டரில் ரவிசங்கரின் சிதார் இசை ஒலிக்க, ஃபேன், வேகமாகச் சுழல, புலி நகங்களுடன் கூடிய தங்கச் சங்கிலி பனியன் மீதாகச் சரிய, லுங்கி அணிந்திருந்த சத்யா, சோபா கரத்தின் மீது ஒரு காலைத் தூக்கிப் போட்டுக் கொண்டு, ஒருகால் தரையில் தாளம் போட குஷன்கள் மீது தலை சாய்த்தபடி நியூஸ்வீக் பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தான். ஒரு பக்கம் பாட்டும் ஒருபக்கம் பத்திரிகைச் செய்திகளும் கவனத்தை ஈர்க்க அவன் வைத்தியலிங்கம்









''பீல்ட்ஸ்மேன் எல்லாம் சரியா பீல்ட் பண்ண முடியாம இப்படி ''சிவனே'' என்று நிற்கிறாங்களே!''
''சிவநாராயண் பேட் பண்ணுகிறார் இல்லையா, அதனால்தான்!''
''அட நாராயணா!''
வி. சரவண குமார்.

வந்ததை அவர் மிக அருகில் வந்த பிறகுதான் உணர்ந்தான். அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்து நின்றான்.

வைத்தியலிங்கம் கோட்டைக் கழற்றி அவனிடம் நீட்டியபடியே, ''என்ன சத்யா! நாலுநாளா ஆபீஸுக்குப் போயிண்டு வரே, ஒண்ணுமே சொல்ல மாட்டேங்கறியே? ஹௌ டூ லைக் யுவர் ஜாப்?'' என்று கேட்டார். பிறகு உட்புறம் பார்த்துப் 'பாக்கியம்'என்று குரல் கொடுத்தார். ''சத்யாவுக்குக் காப்பி கொடுத்தியா? ஆபீஸிலிருந்து களைத்துப் போய்த் திரும்பியிருப்பானே'' என்றார்.

அவர் கொடுத்த கோட்டையும் டையையும் உள்ளே அவர் அறையில் வார்ட்ரோபில் மாட்டிவிட்டுச் சத்யா திரும்பியபோது பாக்கியம் அவருக்குத் தட்டில் கப் அண்ட் ஸாஸரில் காப்பியை நீட்டிக் கொண்டிருந்தாள்.

''அப்பா உங்களை என்னால் புரிஞ்சுக்கவே முடியலே'' என்ற சத்யா கேஸட் ரிகார்டரை நிறுத்தினான்.

வைத்தியலிங்கம் காப்பியின் மணத்தை முதலில் 'முகர்ந்து' அனுபவித்துவிட்டுப் பிறகு உறிஞ்சினார். கூடவே மகன் மேலே பேசக் காத்திருந்தவர் போல் அவனை நோக்கினார்.

''இங்கே இப்போ இவ்வளவு பிரியமா பேசினீங்க. ஆபீஸிலே மட்டும் எதுக்கு என்னை அப்படி இன்ஸல்ட் பண்ணறீங்க?''

பாக்கியம் மகனைக் கவலையோடு நோக்கினாள். ''ஏங்க, நீங்க சொன்னப்புறம்தான் எனக்கே தெரியுது. ரொம்பக் களைச்சுப் போய்த்தான் இருக்கான், சத்யா. இவ்வளவு சோர்வடையும்படியாவோ வேலை கொடுப்பீங்க மகனுக்கு?''

''ஐயோ அம்மா. இவரே பார்த்து வேலை கொடுத்து வாங்கிக் கொண்டால் எவ்வளவோ தேவலாமே. அந்த அருள்ராஜ் இல்லே? அவன்கிட்டே என்னைத் தள்ளிட்டார். அவன் என்னடான்னு கண்ணிலே விரலைக் கொடுத்து ஆட்டறான்!''

''அப்படியா, பேஷ்! பேஷ்! ஐ ஆம் ஸோ ஹாப்பி'' என்றார் வைத்தியலிங்கம்.

''நல்லாத்தானிருக்கு குழந்தை வேலை ரொம்பக் கஷ்டமாயிருக்கு என்கிறான், நீங்க சந்தோஷப்படறீங்களே?''

இதைக் கேட்டுக் கொண்டே வந்த கலோ, ''அது அப்பாவின் சுபாவம் அம்மா. வீட்டிலே தந்தையாக மகனிடம் பழகுவா, அன்பா, பிரியமா இருப்பா. ஆபீஸுக்குப் போனா அவர் பாஸ், இவன் எம்ப்ளாயி. கப்சிப் கபர்தார் தான்!''

''அம்மா! என்னைப் பார்த்து – பி. காம் பட்டதாரியான இந்தச் சத்யாவைப் பார்த்து, முதலாளியோட மகனைப் பார்த்து, அந்த அருள்ராஜ் என்ன சொன்னான் தெரியுமா?''

''என்ன சொன்னான்? என்ன?'' என்று அனைவரும் ஏகக் குரலாகக் கேட்டனர்.

''உட்காருவதற்கு முன்னால் மேஜை நாற்காலியெல்லாம் நல்லாத் துடைச்சிட்டு உட்காருன்னான்!''

''ஐயைய்யோ! அடப் பாவமே'' என்றாள் தனபாக்கியம்.

''சீச்சீ! வெட்கக்கேடு!'' என்று சிரித்தாள் கலோசனா.

''பலே!'' என்றார் வைத்தியலிங்கம். ''நீ தயங்கியிருந்தால் ஒரு டஸ்டரைக் கூடக் கையில் எடுத்துக் கொடுத்திருப்பானே!''

''அதெப்படி அப்பா, அவ்வளவு கரெக்டா சொல்லிட்டீங்க?'' என்று சத்யா வியப்புடன் வினவினான்.

''இருபது வருஷப் பழக்கமாச்சே அவனோடு! நிர்வாகத்திலே அதுதான் முதல் பாடம், சத்யா! டைடினஸ். மேஜை நீட்டா இருந்தா, கணக்கு வழக்கு, கடிதப் போக்கு வரத்து, கஸ்டமர்களுடன் கொள்ளும் தொடர்பு எல்லாமே பரிசுத்தமாய் இருக்கும்.''

''ஏன் அண்ணா? மேஜை துடைக்க அப்பா உனக்கு மாசம் எவ்வளவு சம்பளம் தருகிறார்? ஆயிரம் ரூபாயா?'' என்று கலோசனா கேட்டாள்.

''அப்படிக் கொடுத்தாலும் தேவலாமே; என் மேஜையை மட்டுமின்றி அந்த அருள்ராஜ் மேஜையையும் சேர்த்துத் துடைச்சுடுவேன்'' என்ற சத்யா மூன்று விரல்களை நெற்றிமேல் நாமம் போல் வைத்துக் காட்டி, ''இராக்கிப்படியையும் சேர்த்து எண்ணி நூற்றிப் பதினொரு ரூபாய்'' என்றான்.

''சிவா சிவா'' என்ற பாக்கியம், ''அடுப்பிலே பாலை வைச்சிருக்கேன் போய்ப் பார்க்கிறேன்'' என்றாள். ''நான் போய்ப் பரீட்சைக்குப் படிக்கிறேன்'' என்று கிளம்பினாள் கலோ. சொல்ல வேண்டியதைச் சொல்லி விட்டோம் என்ற அளவுக்கு நிம்மதியுடன் சத்யா தன் அறைக்குத் திரும்பினான்.

வைத்தியலிங்கம் அவர்கள் அனைவரது உணர்வுகளையும் நன்கு புரிந்து கொண்டும் புரிந்ததாகக் காண்பித்துக் கொள்ளாமல் காப்பியை அருந்தி முடித்துவிட்டு மாலைப் பத்திரிகையில் ஆழ்ந்தார்.

அன்றிரவு சத்யா படுக்கப் போகும்போது சோர்வாக இருந்தான். மனச்சோர்வைப் போக்கிக் கொள்ள அவனுக்கு ஒரே உபாயம் தான் தோன்றியது. பிங்கிக்கு ஃபோன் செய்தான். மறுபுறம் அவள் தகப்பனார் யோகேஷ் குரல் ஒலித்தது. ''யாரு சத்யாவா?'' என்று அவன் குரலை அடையாளம் கண்டு கொண்ட அவர், ''பிங்கி இன்று மாலைதான் திரும்பி வந்து சேர்ந்தா. ரொம்ப டயர்டா இருக்கா. நீ வந்து போனதையும்

ஃபோன் பண்ணினதையும் சொன்னேன். ... கொஞ்சம் இரு: அசதிலே தூங்கிட்டாளா விழிச்சிருக்காளா பார்க்கிறேன்'' என்றார்.

சில விநாடிகளில் பிங்கியின் இனிய குரல் ஒலித்தது: ''ஹாய்! சத்யா!''

''தேங்க் காட்!'' என்றான் சத்யா. ''உன் குரலைக் கேட்கலேன்னா எனக்கு இன்றைக்குத் தூக்கமே வராது. என்ன சொல்லிக்காம லேயே போயிட்டே? கிளப்லே எல்லாரும் சேர்ந்து ஸோஷல் சர்வீஸ் நடத்தி னீங்களாமே... எல்லாம் நல்லா நடந்துச்சா?''

''ஓ யெஸ்! மூணு நாள் கேம்ப் பற்றி மூணு மணி நேரமாவது பேசணும். நேரில் சந்திக்க லாம்.''

''என்ன பிரசாரம் பண்ணினே, உமன்ஸ் லிப் பற்றியா?'' என்றான் சற்றே கிண்டலாக.

''அஃப் கோர்ஸ்!'' என்றாள் பிங்கி.

''என்னது? அந்தக் கிராமாந்தரங்களுக்கு என்ன புரியும்?''

''புரியாதவர்களுக்குத்தான் புரிய வைக் கணும்'' என்றாள் பிரமீளா. ''அரைகுறைப் படிப்புடன் பட்டணத்து நாகரிகத்தில் மிதக் கிற பலர் மாதர் சுதந்திரத்தைத் தவறாகப் புரிந்து கொள்கிறார்கள். கிராமங் களில் உள்ள எளிய பெண்களுக்குச் சரி யாகப் புரிய வைக்க முடிகிறது.''

''ரொம்ப சரி'' என்று ஒப்புக் கொண் டான் சத்யா. ''சில நாட்களுக்கு முன்னால் ஓர் அசடுடன் பேசிக் கொண்டிருந்தேன். அவள் பிரா போட்டுக்காததே மாதர் சுதந் திரம்தான் என்கிறாள்!''

''அது மட்டும் மாதர் சுதந்திரம் என்று எண்ணினால் அசட்டுத்தனம்தான். மாதர் சுதந்திரத்தின் ஒரே ஒரு வெளிப்பாடு அது என்று கருதினால் புத்திசாலித்தனம்.''

''இந்தக் கணத்திலே உன்னோட பிரா சுதந்திரம் எந்த அளவில் இருக்கு?'' என்று கேட்டான் சத்யா.

''நாட்டி! நாட்டி!'' என்று சிரித்தாள் அவள். ''உங்க பொல்லாத்தனம் உங்களை விட்டுப் போகாது. நானாவது போகிறேன், படுத்துக் கொள்ள! குட்நைட்!''

அவள் ஃபோனை வைத்து விட்டாள். உடம்பெல்லாம் ஒரு புத்துணர்ச்சி பரவியது போல் உற்சாகம் பெற்றான் சத்யா. விசி லடித்தபடியே தன் அறையை நோக்கி நடக்க முற்பட்டவன் ஃபோன் மணி அடிக்கவே சரேலென்று எடுத்து ரிஸீவரைக் காதில் வைத்துக் கொண்டான். அதே கணத்தில், ''அது எனக்குத்தான், எனக்குத்தான் இருக் கும்'' என்று சொல்லிக் கொண்டே ஓடி வந் தாள் கலோசனா.

ரிஸீவரைப் பேசாமல் அவள் கரத்தில் தந்து விட்டு நடந்தான் சத்யா. ஆனால் ரிஸீவரைக் காதில் வைத்துக் கொண்ட அந்த ஒருகணத்தில் மறுபுறம் ஒலித்த குரல் அவ னுக்குக் கேட்டு அதை அவனால் அடையாளம் கண்டு கொள்ளவும் முடிந்து விட்டது! அது தீபக் பால் குரல். ஒரு குறிப்பிட்ட நேரத் தில் அவன் ஃபோன் பண்ண வேண்டும் என்றும் அப்போது தானே ஃபோனை எடுப்ப தாகவும் முன்னேற்பாடாகப் பேசி வைத் திருக்கிறாள் கலோசனா என்பதில் சந்தேக மில்லை. வீட்டில் இருப்பவர்களுக்கு அவள் தன் தோழியுடன் பேசுவதுபோல் தான் தோன் றும்!

இதன் தாத்பரியம் என்ன என்பது எளி தாக விளங்கியது சத்யா'வுக்கு. புரிய வந்த அந்தத் தாத்பரியம் எழுப்பிய பிரச்னைகளை எண்ணிப் பார்த்தபோது மலைப்பாகவும் இருந்தது. ஆனால் அவை பற்றிய லட்சியமோ கவலையோ சிறிதும் இல்லாதவளாகக் கலோ சனா ஃபோனில், சிரித்துப் பேசிக் கொண்டிருப் பதும் அவனுக்குக் கேட்டது! (தொடரும்)

## முதல் பிரவேசம்

1948-49ம் ஆண்டில்தான் முதன் முதலாக மேற்கிந்தியத் தீவிலிருந்து கிரிக்கெட் குழு இந்தியா வந்தது. மிக வலிமை வாய்ந்த கோஷ்டி. ஜார்ஜ் ஹீட்லி என்ற மேற்கிந்தியத் தீவு ஆட்டக்காரர் 'கறுப்பு பிராட்மன்' என்ற பட்டத்துடன் (Black Bradman) வந்து ஆடினார். மூன்று டபிள்யூக்களில் வால்காட், வீக்ஸ் இருவர் மட்டுமே வந் தனர். இந்த மேற்கிந்தியத் தீவு குழு வுக்கு ஜே. டி. கோத்தார்ட் காப்டன். நம் இந்தியக் குழுவுக்குக் காப்டன். அமர்நாத். ஐந்து டெஸ்ட்களிலும் டாஸை 'பூவா தலையா?' சோதனையில் இழந்தார். மூன்று டிரா. சென்னை டெஸ்டில் மேற்கிந்தியத் தீவுக்கு வெற்றி. ஐந்தாவது டெஸ்ட்டில் இந் தியா வெற்றிபெற வாய்ப்பு இருந்தும் 6 ரன்கள் எடுக்க முடியாமல் ஆட்ட காலம் முடிந்துவிட்டது.



# சிரிக்கவைப்பவரின் தவிப்புகள்

## "கோபு"





★ 'அலங்காரி' - தங்கவேலு, மூர்த்தி, ஐசரி வேலன்

★ 'ஆசைக்கு வயசில்லை' - சோ, கே. ஆர். விஜயா

கோபு என்ற பெயர் எப்படிக் குறைவான இரண்டு எழுத்துக்களால் ஆனதோ அதைப் போலத்தான் அவர் உயரமும், ஆனால் உள்ளம் மிக உயர்ந்தது. தான் ஒரு டைரக்டர் ஆன பிறகும் கூடப் பல படங்களுக்கு நகைச் சுவைக் கான காட்சிகளை இப்பொழுதும் தயங்காது எழுதிக் கொடுக்கிறார். இன்று நகைச்சுவைக் கதாசிரியர்களிலேயே முன்னணியில் நிற்கிறார் கோபு.

''நான் திரை உலகத்தில் நுழைந்ததே ஒரு நகைச்சுவைதான்'' என்று ஆரம்பித்த கோபு மேலும் தொடர்ந்தார்: ''1958ம் வருடம் ஏற்றுமதி இறக்குமதி கம்பெனி ஒன்றில் வேலை செய்து கொண்டிருந்தேன். ஒருநாள் ஆபீசுக்கு ஒரு பெண் போன் செய்தாள். ''எழும்பூர் ஸ்டேஷனில் சீசன் டிக்கெட்டில் நீங்கள் வந்து இறங்குவதை நான் அடிக்கடி பார்க்கிறேன். இன்று ஐந்து மணிக்கு ஓவர் ப்ரிட்ஜில் கண்டிப்பாகச் சந்திக்கணும்'' என்றாள். என்னை ஒரு பெண் சந்திக்கத் துடிக்கிறாள் என்றால், அவளுக்குக் கண் பார்வை இராது என்று தீர்மானித்தேன் நான். என்றாலும்கூட திடீரென்று வந்த இந்த அழைப்பு என்னை வியர்த்து விறுவிறுக்கச் செய்துதான் விட்டது. மறுபடியும் போன். ஸ்ரீதரிடமிருந்து. ''என்னடா எழும்பூர் ஸ்டேஷனுக்குப் போறியா?'' என்று கேட்டார். உடனே புரிந்து கொண்டேன். அப்படி பெண் போல் பேசி ஏமாற்றியது ஸ்ரீதர்தான் என்று. ''என்ன பெரிதாக ஆபீஸில் புரட்டிக் கிழிக்கிறாய்? பேசாமல் என்னிடம் வசனஉதவியாளனாக வந்து சேர்ந்துவிடேன்'' என்றார். அன்றுதான் எனக்குத் தொழில் மாற்றம். ''கல்யாணப் பரிசு'' படத்துக்கு ஸ்ரீதருக்கு உதவியாளனாகச் சேர்ந்தேன்.

சில நல்ல படங்கள் அமைந்த விதமே வேடிக்கை. ''கலாட்டா கல்யாணம்'' கதை இரண்டே நாட்களில் என்னால்எழுதப்பட்டது. சீனப் படையெடுப்பின் போது ஸ்ரீதர் என்னைக் கூப்பிட்டு ''யுத்தநிதிக்காக நாடகம் வேண்டும். சிவாஜி அவர்களும் எல்லா முன்னணி கதாநாயகர்களும், கதாநாயகிகளும் உண்டு. அதற்குத் தகுந்தமாதிரி எழுது'' என்றார். ஐந்து கதாநாயகர்கள், ஐந்து கதாநாயகிகள் அமைந்து எழுதிய நாடகம். வெற்றி தேடித் தந்து திரைப்படமாகவும் வெளிவந்து வெற்றி பெற்றது.

பிறகு எனக்கு நாடக ஆசை வந்தது. மாயா பஜார், ஸ்ரீமதி, திக்குத் தெரியாத வீட்டில், காசேதான் கடவுளடா முதலிய நாடகங்களை மேடைகளுக்காக எழுதினேன். எல்லாமே எனக்கு வெற்றியைத் தந்தன.

பார்த்தஸாரதி சபாவில் ''காசேதான் கடவுளடா'' நாடகம் நடந்து கொண்டிருந்தது. அதில் நடித்துக் கொண்டிருந்த வெண்ணிற ஆடை மூர்த்தி எனது இரண்டாவது மனைவி இவள்தான் என்பதற்குப் பதிலாக நான் அவளுடைய Second Husband என்று சொல்வது போல் வசனத்தை அமைத்திருந்தேன். நாடகம் நடந்து கொண்டிருந்தது.

முன் வரிசையில் உட்கார்ந்திருந்த ஒரு ரிடையர்ட் ஜட்ஜ், குறிப்பிட்ட இந்த வசனம் வந்தவுடன் சிரிப்பை அடக்க முடியாமல் உரக்கச் சிரித்தார். சிறிது நேரத்தில் ஒரு பரபரப்பு. எங்களுக்கு ஒன்றுமே புரியவில்லை. இவ்வளவு நேரம் எனது நாடகத்தை ரசித்துக் கொண்டிருந்த அவர் சிரித்தபடியே உயிரையும் விட்டு விட்டிருந்தார்! என் நகைச்சுவை எழுத்துக்கு அவர் சிரிப்பு ஒரு வெற்றிதான் என்றாலும் அவர் உயிரை அந்தச் சிரிப்பே எடுத்துக்கொண்டது எனக்குச் சொல்ல முடியாத துக்கம்தான்.

''சிவந்த மண்'' படத்துக்காக ரோம் நகரத்துக்குச் சென்றோம். சிவாஜி அவர்களுக்குப் பாட்டில் வரும் வார்த்தைகளை ஞாபகப்படுத்த கேமராவின் அருகில் நின்று உரக்கப் பாடுவேன். நான் சொல்லிக் கொடுத்துத்தான் அவர் பாடுகிறார் என நினைத்து வெளி நாட்டவர்கள் எல்லோரும் என்னை ஹீரோ போல் பார்ப்பார்கள். என் மகிழ்ச்சியைப் பற்றிக் கேட்கவா வேண்டும்?

மேல்நாடுகளில் படப்பிடிப்பு நடந்தபோது யாருக்கும் தெரியாமல் ஊறுகாய், கோங்குரா சட்னி, மற்றும் சில சாப்பிடும் பொருள்களைக் கலந்து எனது கோட் பாக்கெட்டில் வைத்திருப்பேன். அவ்வப்போது யாருக்கும் தெரியாமல் சாப்பிடவும் செய்வேன். இதன் விளைவு நான் இந்தியா திரும்புவதற்குள் கோட்பாக்கட் ஒரு கலராகவும், மீதிபாகம் ஒரு கலராகவும் மாறிவிட்டது.

சிலசமயம் நாம் எழுதும் வசனங்களே நம்மை வசப்படுத்தி விடுவதும் உண்டு. 1974ம் வருடத்தில் நான் டைரக்டராக மாறினேன். நான் நாடகமாக எழுதியிருந்த ''காசேதான் கடவுளடா'' தான் என் முதல் படம். அதில் தேங்காய் சீனிவாசன் அசல் மக்கடை வியாபாரி போலவே பேசுவார். படப்பிடிப்பு நடந்து கொண்டிருந்தபொழுது எல்லோரும் சாதாரணமாகப் பேசிக் கொண்டிருக்கும்போதுகூட அதே பாணியில் பேச ஆரம்பித்தோம். மற்றவர்கள் மறந்தபிறகும் படம் முடிந்து பல மாதங்கள் ஆகியும் என்னால் அந்த மக்கடைக்காரர் பாணியை விடமுடியவில்லை. பிறகு ரொம்பவும் கஷ்டப்பட்டுத்தான் அதை மாற்றினேன்.

''ராசி நல்ல ராசி'' என்று ஒரு படம். நான் எழுதி டைரக்ட் செய்த படம். எந்தநேரத்தில் பெயர்வைத்தார்களோ? யார் ராசியும் சரியில்லை. அந்தக் கம்பெனிக்கு நான்கு பார்ட்னர்கள்.

ஒருநாள் வெளிப்புறப் படப்பிடிப்பு. இரண்டு ரௌடிகள் வீட்டுக்குள்ளிருந்து வெளியே வரும் ஸ்ரீகாந்தை அடித்துப் போட்டு அவர் பெட்டியை எடுத்துக்கொண்டு கேபரே டான்ஸர் ஜெயக்குமாரியோடு காரில் தப்பிச் செல்ல வேண்டும். இதை ஜெய்சங்கர், விதுபாலா பார்த்து விடுகிறார்கள். இது சம்பவம். படப்பிடிப்புத் தொடங்கும் சமயத்தில் முதல் பார்ட்னர் வந்தார். ''கோபு சார்! ஸ்ரீகாந்த் 'பணம் தராமல் நான் வரமாட்டேன்' என்று சொல்லிவிட்டார். கொஞ்சம் அட்ஜெஸ்ட் செய்யுங்கள்'' என்றார். ''சரி, ஸ்ரீகாந்துக்கு டூப் போடலாம். பாவம் உங்களுக்கும் ரிலீஸ் சமயம்'' என்றேன். ஐந்து நிமிடங்களுக்குப் பிறகு, இரண்டாவது பார்ட்னர் வந்தார். ''கோபு சார்! ஜெயக்குமாரி கிடைக்கவில்லை. ஆஸ்பத்திரியில் பிரசவ நேரமாம்'' என்றார். ''நீங்க ஐந்து வருடமாகப் படம் எடுத்தால் ஜெயக்குமாரி என்ன செய்வார், பாவம்?'' என்று, அவருக்கும் டூப் தயார் செய்து விட்டேன். சில நிமிடங்களுக்குப் பிறகு மூன்றாவது பார்ட்னர் வந்தார். ''சார்! இந்த இரண்டு ரௌடிகளில் ஒருவர் எமர்ஜென்ஸி காரணமாக எங்கிருக்கிறார் என்றே தெரியவில்லை. அவர் கட்சிப் பற்றுக் கொண்டவர். பல ஜெயில்களுக்குப் போய்த் தேடி விட்டேன்'' என்றார். ''சரி அவருக்கும் டூப், வேறு வழியில்லை!'' என்றார் நான்காவது பார்ட்னர். இதைப் பார்த்துக் கொண்டிருந்த ஜெய்சங்கர். [கோபு! ஐந்து மணிக்குள் என் வேலையை முடிக்காவிட்டால் எனக்கும் டூப் போட்டுக்கோ. நான் சேலம் போகிறேன்'' என்றார். ஒருவாறு சமாளித்து அந்தக் காட்சியை முடித்தேன். படம் ரிலீசான அன்று கெயிட்டித் தியேட்டரில் அந்தக் காட்சிக்குப் பிரமாத கைத்தட்டல்!

தங்கவேலுவுக்கு எழுதும்போது எனக்கு ஒரே ஒரு பிரச்னைதான். அபசகுன வார்த்தைகளைப் பேச முடியாது என்று அடம் பிடிப்பார். ''அண்ணே! நகைச்சுவைதானே?'' என்றாலும் கேட்க மாட்டார்.

எழுத்தாளர்களில் வாலி நல்ல நகைச்சுவையாளர். திடீரென்று ஒருநாள் என்னிடமும் எம். எஸ். விசுவநாதனிடமும், ''ஏ.எம். ராஜா மாலையில் பாடுவதில்லை ஏன்?'' என்றார். நாங்கள் விழித்தோம். ''அவர்தான் ஏ. எம். ராஜாவாயிற்றே பி. எம்மில் பாடுவாரா?'' என்றார். விழுந்து விடாமல் சிரித்தேன்.

பேட்டி: சலன்.

## பாவம் பேடி!

பேடி இந்தியக் காப்டனான பிறகு நாம் ஆறு டெஸ்ட் தொடர்களில் விளையாடி இருக்கிறோம். இவற்றில் இரண்டு ஜெயித்திருக்கிறோம். இரண்டுமே நியூஸிலாந்துக்கு எதிராக. ஆஸ்திரேலியா, வெஸ்ட் இண்டீஸ், இங்கிலாந்து, பாகிஸ்தான். இந்த 4 நாடுகளோடு விளையாடியதில் தோல்விதான்.

ஸ்போர்ட்ஸ் வீக். —பாலி.



கண்களில் மை,மங்களமாய் நெற்றிக்
குங்குமம்,பின்னிய கூந்தலில் செவ்வந்தி;
பேரழகு மேனிக்கோ பெர்க்கினி சிற்றுடை,
விமல் சீர்வரிசை...
பெருமை தவழ வருகுதே பொங்கல்!

# பொங்கலுக்கு விமல் படைப்பு:

# பெர்க்கினி

## கோவார்டினேட்ஸ்

செந்தமிழ்க்
கன்னியருக்கு விமல்
படைக்கிறது 20 புதுமைக்
கோல தினுசுகளில்,
வர்ணச்
சேர்க்கைகளில்-
பெர்க்கினி
கோவார்டினேட்ஸ்




பெர்க்கினி
கோவார்டினேட்ஸ்
கண்ணுக்குக் கவர்ச்சி,
கட்டழகு மலர்ச்சி!

எல்லா விமல் சில்லறை விற்பனைக் கடைகளிலும், பிரபலமான
இதர ஜவுளிக் கடைகளிலும் கிடைக்கிறது.



# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

ராஜ்மோகன் காந்தி

ஆமதாபாத்தில் ஜூன் இறுதியில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி கூடியபோது மகாத்மாவுக்கு ஒரு பாடம் காத்திருந்தது. ஒழுங்குமுறை கருதி அவர் சுயராஜ்யக் கட்சிக்காரர்கள், சட்டசபைகளில் தங்கள் முழு கவனத்தையும் செலுத்த வேண்டும் என்றும் காங்கிரஸ் கட்சி அமைப்பில் எல்லாப் பதவிகளையும் சட்டசபை பகிஷ்காரத்தில் நம்பிக்கை கொண்ட விசுவாசிகள் வகிக்க வேண்டும் என்றும் கூறினார்.

சுயராஜ்யக் கட்சிக் காரர்கள் இதனை ஆவேசத்துடன் எதிர்த்தார்கள். எனவே இக் கருத்தை அவர் வற்புறுத்தாமல் விட்டுவிட்டார். அடுத்து காந்தி, கதர் சிட்டம் தந்து அங்கத்தினராகும் யோசனையை வெளியிட்டார். இதையும் எல்லாக் காங்கிரஸ்காரர்களுக்கும் அவர் வலியுறுத்தவில்லை. காங்கிரஸில் பல்வேறு கமிட்டிகளுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள நபர்களுக்கு மட்டும் இந்த நிபந்தனையை விதித்தார்.

மறுபடியும் அவர் கூர்மையான தாக்குதல்களுக்கு உள்ளானார். அதன் விளைவாக அவர் இந்தத் திட்டத்தையே வாபஸ் பெறும்படியாகி விட்டது. கடைசியாக மகாத்மா கொண்டு வந்த ஒரு தீர்மானம், கல்கத்தாவில் ஓர் ஆங்கிலேயர் கொலை செய்யப்பட்டதைக் கண்டித்தது. இதனையும் கூட தாஸும் மற்றவர்களும் தாக்கிக் கிட்டத்தட்ட முறியடிக்கும் நிலைக்குக் கொண்டு வந்து விட்டனர்.

காந்தியின் வார்த்தைகளிலேயே கூறுவதென்றால் ஆமதாபாத் அவரைத் "தோல்வி அடையச் செய்து அடக்கத்தைக் கற்பித்தது." தமது யோசனைகள் காங்கிரஸ் பிரிவினரிடையே இருந்த மனக்கசப்பை அதிகரித்திருக்கிறதேயன்றிக் குறைக்கவில்லை என அவர் கண்டார். இந்தச் சூழ்நிலையில் அவர் அடிப்படை வேற்றுமை என்றுதாம் கருதிய ஓர் அம்சத்தில் பணிந்து கொடுக்கத் தீர்மானித்தார். சட்டசபைப் பகிஷ்காரத்தில் விட்டுக் கொடுத்து அதன்மூலம் அதைவிட மதிப்புள்ளதான சகோதரத்துவத்தையும் சகிப்புத் தன்மையையும் காங்கிரஸ்காரர்களிடையே காப்பாற்றித் தர முடிவு செய்தார்.

சுயராஜ்யக் கட்சியினரைப் பின்னால் வெற்றி கொள்வதற்காக இப்போது விட்டுக் கொடுக்கத் தீர்மானித்தார். இதன் நிகர பலன் காங்கிரஸை முழுக்க முழுக்கச் சுயராஜ்யக்கட்சியினரே தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் வைத்துக் கொள்வதுதான் என்றால் அப்படியே இருந்துவிட்டுப் போகட்டும். ஒத்துழையாமையை நிறுத்தி வைக்கத் தயாரான அவர், லிபரல் கட்சியினருக்கும் கைகொடுத்தார். மூன்று முன்னேற்றத் திட்டங்கள் தேசிய ஒற்றுமைக்கு அரங்கமாக அமைய முடியும் என்றார். அவை கதர், ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை ஒழிப்பு ஆகியன.

ஸி. ஆர். தமது மதியினால் இதில் இருந்த நியாயத்தை உணர்ந்து கொண்டார். மார்ச் 29ம்தேதி அவர், "மிகச் சிறந்ததான ஒரே வழிதான் இருக்கிறது. அது சுயராஜ்யக் கட்சியினர், தங்களது அருமைத் திட்டத்தை முழுமையாக அமல்படுத்திப் பார்க்க விடுவதுதான். அதன் பிறகு அவர்கள் சாலை, குட்டிச்சுவரில் தான் முட்டிக் கொள்கிறது என்பதையும் எங்கும் அழைத்துப் போகவில்லை என்பதையும் கண்டு கொள்வார்கள்."[1]

இருப்பினும் தாராள மனப்பான்மையைக் காட்டியபோதும் வளைந்து கொடுத்த போதும் தனது எஜமானரைப் போல் அதே அளவு மனநிறைவுடனும் நளினத்துடனும் ஸி. ஆரால் செயல்பட முடியவில்லை. சுயராஜ்யக் கட்சிக்காரர்களின் புரட்சியை மகாத்மா அடக்கவில்லை என்பதில் ஏமாற்ற வேதனையை அவர் உணர்ந்தார்.

"நமது படைக்குள் புகுந்து விட்டிருக்கிற தீமையை நாம் எதிர்க்க முயலக்கூடாது"

> மனைவி: ஆனாலும் இப்படி விருந்தாளிகளுக்குப் பயந்துண்டு எல்லா உறவுக் காராளுக்கும் 'ஜனவரி 12ஆம் தேதியிலிருந்து 17ஆம் தேதிவரை ஊரில் இருக்க மாட்டோம்' என்று கடிதாக எழுதணுமா?
>
> ரா. ஜெயராமன்.



என்று காந்தி ஸி. ஆருக்குச் சொன்னார். "நாம் நமது அதிகாரத்தை முழுவதுமாக விட்டுக் கொடுத்துவிட வேண்டும். பெரும்பான்மை வோட்டு பலத்தைக் கொண்டு எல்லாவற்றையும் முடிவு செய்யலாகாது. அடிப்படைக் கொள்கையைப் பாதிக்காத வரை நாம் எதற்கும் தொடர்ந்து விட்டுக் கொடுத்தே வர வேண்டும்."[2]

---

1. ஸி.ஆர். தேவதாஸுக்கு எழுதியது. 29-3-24 SN 8629 சபர்மதி சங்கிரஹாலயம்.
2. காந்தி ஸி. ஆருக்கு எழுதியது 6-9-24 -மகாதேவ தேசாய் டயரி பாகம் 4 பக்கம் 175.



ஒருவர்: என்ன 'காச் மூச்' என்று சத்தம்?
மற்றவர்: பந்தை 'காச்'சு பிடித்தாரா இல்லையா என்ற சந்தேகம்; அதான் இப்படிக் கத்துகிறார்கள்.

எஸ். சந்திரசேகர்.



நினைத்தது ஒன்று நடப்பது ஒன்று என அனுபவபூர்வமாக சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் உணரும்போது அவர்கள் பாதை திரும்பித் தம்மிடமே வருவார்கள் என்று காந்தி எதிர்பார்த்தார்.3 ஆனால் அதே நேரத்தில் அவர்கள் ஒரு தேவையைப் பூர்த்தி செய்கிறார்கள் என்பதையும் ஒப்புக் கொண்டார்: ''பெருவாரியான மக்கள் அல்ப சுகத்துக்கு ஆசைப்படுகிறார்கள். அவர்களுடைய பிரதிநிதிகளாக சுயராஜ்யக் கட்சியினர் செயல்படுகின்றனர்.''4

வி. ஆருக்கும் மற்றவர்களுக்கும் காந்தி மேலும் சொன்னார்: ''இந்தத் திடீர் மாற்றங்களுக்குத் திடீரென அனுசரித்துப் போவது என்பது உங்களுக்கெல்லாம் சிரமம் என்பது எனக்குத் தெரியும். ஆனால் எனக்குள்ளே இருந்துகொண்டு, சுயராஜ்யக் கட்சியினருக்கு விட்டுக் கொடு என்று சொல்கிற தலைவனை என்னால் அடக்கிவிட முடியவில்லை.''5



வி. ஆர். உள்படச் சிலர் வற்புறுத்தியதால் மகாத்மா 1924 காங்கிரஸுக்குத் தலைமை வகிக்கச் சம்மதித்தார். ''பொது மக்கள், நீங்கள்தான் தலைமை வகிக்க வேண்டும் என விரும்புகிறார்கள்'' என வி. ஆர். எழுதினார். 'செப்டம்பர் இறுதியில் மகாத்மா ஹிந்து முஸ்லீம் கலவரம் நடந்ததற்குப் பிராயச் சித்தமாகத் தாம் இருபத்தொரு நாள் உண்ணாவிரதம் இருக்கப் போவதாக அறிவித்தார்.

ஒருவர் மதத்தை ஒருவர் பழிப்பதும் தாறுமாறாக அறிக்கை விடுவதும் பொய் பேசுவதும் ஒரு பாபமும் அறியாதவர்கள் தலையை உடைப்பதும் கோயில்களையும் மசூதிகளையும் புனிதமிழக்கச் செய்வதுமே இந்தியாவில் காரியமாகப் போய்விட்டதுபோல் மகாத்மாவுக்குத் தோன்றியது.7

உண்ணாவிரதம் இருந்த நாட்கள் தில்லியில் முகமது அலியின் வீட்டில் கழிந்தன. அப்போதுதான் சிறிது சிறிதாகப் பலம் பெற்று வந்த காந்தியின் உடம்பு சுயமாக ஏற்றுக்கொள்ளப்பட்ட எந்தக் கஷ்டத்தையும் தாங்கி மீளுமா என்பதில் பெருமளவு சந்தேகம் கொண்ட வி. ஆர். அவர் பக்கத்தில் இருப்பதற்காகவே டில்லிக்குச் சென்றார்.

ஆனால் மகாத்மா ஒவ்வொரு நாளும் வேளைக்கு உண்டு, பழங்களும் பாலும் சாப்பிட்டு வந்தவரைப் போல் புன்னகை புரிந்து தம்மிடம் பேசியதைக் கண்டு அவர் வியப்படைந்தார்.8 தேவதாஸுக்கு வி. ஆர் எழுதினார்: ''மகாத்மாவின் உண்ணாவிரதம் ஓர் அற்புதம். ஆச்சரியப்படத்தக்க விதத்தில் அவர் புதுமை குன்றாத அழகுடன் விளங்குகிறார்.''9

இந்த உபவாசத்தினால் டில்லியின் கலவரச் சூழலில் ஓரளவு அபிவிருத்தி ஏற்பட்டது. ஆயினும் பெரிய முஸ்லீம் தலைவர்களிடையே ஒருவித பிடிவாதம் இருப்பதை வி. ஆர். கவனித்தார்.

''முஸ்லீம் தலைவர்களைப் பொறுத்த மட்டில் நான் இப்போது மனம் மாறியவனாக இருக்கிறேன்'' என்று அவர் தேவதாஸுக்கு எழுதினார். ''எனக்கு அவர்களைப் பிடிக்கவே யில்லை. அவர்களிடம் எவ்வித மனமாற்றத்தையும் நான் காணவில்லை. உபவாசத்தின் மனோ தத்துவ ரீதியான பாதிப்பை அவர்கள் சிறிதும் அடையவில்லை. முஸ்லீம்களின் நன்றியற்ற தன்மை, ஹிந்துக்கள் அடைந்த துயரங்கள், முஸ்லீம் தலைவர்களின் இதயமற்ற அலட்சியப் போக்கு இவை காரணமாக மகாத்மா அடைந்துள்ள ஆழ்ந்த துயரையும், அவர் சற்றும் குறையாத நம்பிக்கையோடு ஆண்டவனை நோக்கி இன்னமும் தடுமாறிச் சென்று கொண்டிருக்கிறார் என்பதையும் இவர்கள் சிறிதும் உணரவில்லை.

''மிக முக்கியமான விஷயங்களைப் பற்றி மாறிய மனப்பான்மையுடன் நான் டில்லியிலிருந்து திரும்புவேன் என்று தோன்றுகிறது. ஒரு விஷயம் மிகத் தெளிவாகத் தெரிகிறது. சுயராஜ்யத்துக்கான நடவடிக்கைகளை நீண்டகாலம் நிறுத்தி வைத்துவிட வேண்டியதுதான்.''10 (தொடரும்)

தமிழாக்கம்: இ. ராஜேந்திரன்



3. டெண்டுல்கர், மகாத்மா, பாகம் 2, பக்கம் 172
4. காந்தி வி. ஆருக்கு எழுதியது 15-9-24 மகாதேவ தேசாய் டயரி பாகம் 4 பக்கம் 183.
5. மேற்படி.
6. வி. ஆர். காந்திக்கு எழுதியது 24-7-24 SN 8999, சபர்மதி, சங்கிரஹாலயம்.
7. டெண்டுல்கர், மகாத்மா, பாகம் 2 பக்கம் 198.
8. வி. ஆர். தேவதாஸ் காந்திக்கு எழுதியது 26-9-24, தேவதாஸ் காந்தி தாள்கள்.
9. மேற்படி 6-10-24.
10. மேற்படி 26-9-24.

# துளசி மாடம்

நா. பார்த்தசாரதி

## 32

காமாட்சியம்மாளின் அந்தரங்கத்தில் இந்தக் கலியாணம், இதன் வைபவங்கள், இது தொடர்பான கிருஹப்பிரவேச முகூர்த்தம் எல்லாவற்றின் மேலும் வெறுப்புத்தான் நிரம்பிக் கிடக்கிறதென்று தாங்களாகவே கற்பித்து நினைத்துக் கொண்டு அவளிடம் பேசிக் கொண்டிருந்தார்கள் பாட்டியும் பெரியம்மாவும்.

ஆனால் காமாட்சியம்மாளின் உள்மனமோ கமலியையும் ரவியையும் விதம்விதமாக மணக்கோலத்தில் கற்பனை செய்து கொண்டிருந்தது. நெற்றிச் சரமும், மாட்டலும், பின்னல் குஞ்சலமும் குண்டலமும், கூரைப் புடைவையுமாகக் கமலியை நினைத்து நினைத்துத் தன் அகத்திலேயே ஓர் அழகிய மணக்கோலத்தை உருவாக்கி உருவாக்கித் திருப்தியும் அதிருப்தியுமாக மாறி மாறி அடைந்து கொண்டிருந்தது காமாட்சியம்மாளின் உள்ளம்.

''நீங்க ரெண்டுபேரும் சித்தே பேசாம இருங்கோ. எனக்கு மூளையே குழம்பிப் பைத்தியம் பிடிச்சிடும் போலே இருக்கு பாட்டி!'' — என்று அழுகைக்கிடையே இருவரையும் வேண்டிக் கொண்டாள் காமாட்சியம்மாள். அவளை அவர்களால் அப்போது உடனே புரிந்துகொள்ள முடியவில்லை. அவள் என்ன மனப்போக்கில் இருக்கிறாள் என்பதை அறிய அவர்கள் செய்த எந்த முயற்சியும் பலிக்கவில்லை.

நாளைக்கு இரவு பாலிகை கரைக்கிறார்கள். நாளன்றைக்குப் பொழுது புலர்ந்தால் கிருஹப் பிரவேசம். காமாட்சியம்மாள் என்ன நினைக்கிறாள் என்பது யாருக்கும் புரியாத புதிராயிருந்தது. அவள் முகத்தில் தெம்பும் இல்லை. உடலில் சக்தியும் கிடையாது. கண்களில் அழுகையும் நிற்கவில்லை. யாரிடமும் மனசுவிட்டு அவள் பேசவும் இல்லை.

கிருஹப் பிரவேசத்திற்கு முதல்நாளே முத்துமீனாட்சிப் பாட்டி, ''நல்ல காரியத்திலே வெள்ளைப் புடைவைக்காரி அங்கே நின்னு இங்கே நின்னுன்னு இங்கே எனக்குக் கெட்ட பேர் வரப்பிடாதுடீயம்மா''—என்று காமாட்சியம்மாளிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டுப் போய் விட்டாள். முத்துமீனாட்சிப் பாட்டி போன பின் பார்வதியிடமும், குமாரிடமும், காமாட்சியம்மாளைப் பார்த்துக் கொள்ளச் சொல்லிவிட்டுத் தெரிந்தவர்கள் வீட்டுக்குப் புறப்பட்டுப் போய் விட்டாள் கிராமத்திலிருந்து வந்திருந்த காமாட்சியம்மாளின் பெரியம்மா.

காமாட்சியம்மாள் மிகவும் வைதிகமாகக் கட்டிக் காத்து வந்த சமையலறைக்குள் தங்களை நுழைய விடுவாளோ மாட்டாளோ என்கிற பயத்தில் பின்புறம் தோட்டத்தில் கீற்றுப் பந்தல் போட்டுச் சமையலுக்குக் கோட்டையடுப்பு ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்கள் சமையற்காரர்கள். மறுநாள் காலையில் கிருஹப் பிரவேசம் என்றால் முதல்நாள் இரவே தன் வீட்டுத் திண்ணையில் வந்து படுத்துக் கொள்ள விரும்பியும், ஒரு சுபமுகூர்த்தத்துக்குமுன்னால் அநாவசியமாகக் காமுவுக்கும் தனக்கும் சண்டை மூண்டுவிடுமோ என்ற முன்னெச்சரிக்கையாலும், தயக்கத்தினாலும் சர்மா அதைத் தவிர்த்திருந்தார். வாசலில் கட்டியிருந்த வாழை மரங்களும், மாவிலைத் தோரணமும், செம்மண் கோலமும் தவிர வேறு கலகலப்போ ஆரவாரமோ பரபரப்போ இன்றி விளங்கியது அந்த வீடு. உள்ளேயிருந்து காமாட்சியம்மாள் வேதனையால் சன்னமான குரலில் முனகும் ஒலியும், இருமல்களும் கேட்டுக் கொண்டிருந்த நிலையில் அந்த வீட்டில்தான் மறுதினம் அதிகாலையில் கமலியும் ரவியும் கிருஹப்பிரவேசம் செய்யப் போகிறார்கள் என்பதற்கான முன்னறிகுறி எதுவுமே இல்லாதிருந்தது. அக்கம்பக்கத்தார்வந்துபோகிற கலகலப்போ ஆரவாரமோ கூட அப்போது அவ்வீட்டில் இல்லை.

மறுநாள் அதிகாலை நான்கு மணிக்கே காமாட்சியம்மாளுக்குத் தூக்கம் விழித்து விட்டது. தற்செயலாக அன்று வெள்ளிக்கிழமை வேறு. அம்மாவுக்குத் துணையாகக் கல்யாண வீட்டிலிருந்து புறப்பட்டு வந்து படுத்திருந்த பார்வதியும், குமாரும் நன்றாக அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்தார்கள். காமாட்சியம்மாள்தான் முதலில் விழித்துக் கொண்டிருந்ததனால் தட்டுத் தடுமாறி எழுந்திருந்து கிணற்றுப் பக்கம் சென்றாள். அப்போது அவளைத் தடுப்பதற்கு அந்த வீட்டில் யாரும் இல்லை. அதிகாலைக் குளிர் காற்று சில்லென்று முகத்தில் வந்து உராய்ந்தது. தோட்டத்தில் மலர்ந்திருந்த பூக்களின் வாசனையைச் சுமந்து கொண்டு வந்து பரப்பியது அந்தக் காற்று. கிணற்றில் தானே தண்ணீர் இறைத்து நீராடினாள் காமாட்சியம்மாள். உள்ளே திரும்பிவந்து விசேஷ நாட்களில் தான் விரும்பி அணியும் கருநீல நிறத்துச் சரிகைப் பட்டுப் புடைவையை அணிந்து தலையைத் துவட்டி ஈரத்தோடு நுனி முடிச்சுப் போட்டு நெற்றிக்குத் திலகமிட்டுக் கொண்டாள். மாட்டுத் தொழுவத்துக்குப் போய்ப் பால் கறந்து வைத்தாள். தோட்டத்தில் போய்ப் பூக்கொய்து கொணர்ந்து தொடுத்துக் கொஞ்சம் தன் தலையில் செருகிக் கொண்டு மீதத்தை அப்படியே வைத்தாள். வீட்டின் புராதனமான



இந்தியக் கிரிக்கெட் டீம் மானேஜர் கெய்க்வாட் இந்தியா - பாகிஸ்தான் டெஸ்டில் இரண்டு செஞ்சுரி அடித்தால் தன்னுடைய 'சிக்கோ' கடிகாரத்தைப் பரிசாகத் தருவதாக கவாஸ்கரிடம் கூறியிருந்தார்.

இப்பொழுது கவாஸ்கர் அந்தக் கடிகாரத்தைக் கையில் கட்டிக் கொண்டு இருக்கிறார். இந்தக் கடிகாரம் ஒரே சமயத்தில் 12 நாடுகளின் நேரத்தைக் காட்டும்.

ஸ்போர்ட்ஸ் வீக்.
பாபு.

ஆகிவந்த வெள்ளித் தாம்பாளத்தை உள்ளேயிருந்து எடுத்துத் துலக்கி அதில் ஆரத்திக்கு மஞ்சள்நீர் கரைத்து வைத்தாள். வாசலில் தெளித்துக் கோலம் போட்டாள்.

பார்வதி கண் விழித்தபோது அம்மாவே எழுந்து நீராடிய கூந்தல் ஈரம் புலராமல் கூடத்திலிருந்து விளக்கு ஏற்றிக் கொண்டிருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டுப் போனாள்.

''இந்த உடம்போட உன்னை யாரும்மா எழுந்திருக்கச் சொன்னது? ஐயையோ... பச்சைத் தண்ணியிலே குளிக்க வேறே செஞ்சிருக்கியா? ஏம்மா இதெல்லாம் பண்ணினே? அதான் இதெல்லாம் கவனிக்கிறத்துக்குன்னு நான் வந்திருக்கேனே?''

''சரிதான் போடீ... நீ பெரிய மனுஷி! உனக்கென்ன தெரியும்டீ இதெல்லாம்... போ... நீயும் போய்ச் சீக்கிரமாகக் குளிச்சிட்டு வா...''

—அம்மாவின் இந்தத் திடீர் மாறுதலும் உற்சாகமும் பார்வதியால் உடனே நம்ப முடியாதபடி இருந்தன. பல நாட்களாகச் சரியான உணவு இன்றி வெறும் கஞ்சியும், பழங்களுமே சாப்பிட்டுக் கொண்டிருந்த அம்மாவின் குரலிலோ, செயல்களிலோ மிடுக்கு இல்லை என்றாலும் தானே ஏற்படுத்திக் கொண்ட உற்சாகத்தினாலும் நலிந்திருந்தும் வலிந்து பெறுவதற்கு முயன்ற சக்தியினாலும், காமாட்சியம்மாள் அந்த அதிகாலையில் அவ்வீட்டின் சுமங்கலியாகவும் கிருஹ லட்சுமியாகவும் பொலிவுடன் நடமாடிக் கொண்டிருந்தாள்.

கிராமத்துக்கே உரிய சோபையுடன் கிழக்குத் திசை வெளுத்துக் கொண்டிருந்த போது தெருக்கோடியிலிருந்து மேளம் நாகஸ்வர இசையுடன் கூட்டமாக மனிதர்கள் வரும் ஒலியரவங்கள் கேட்டன. காமாட்சியம்மாள் தெருத் திண்ணைக்கு வந்து எட்டிப் பார்த்துக் கமலியும் ரவியும் மற்றவர்களும் தான் வடக்குத் தெருவில் கல்யாண வீட்டிலிருந்து புறப்பட்டுக் கிருஹப் பிரவேசத்துக்காக ஊர்வலமாக வருகிறார்கள் என்று புரிந்து கொண்டாள். மகிழ்ச்சியாலும், வலிந்து ஏற்படுத்திக் கொண்ட உற்சாகத்தினாலும் தனது உடல்நிலைக்கு மீறிய செயல்களை அப்போது அவள் செய்து கொண்டிருந்தாள். தலைசுற்றிக் கீழே மயங்கி விழுந்து விடாமல் திண்ணைத் தூணை இறுகப் பற்றிக் கொண்டாள்.

அக்கம் பக்கத்திலும் எதிர் வரிசையிலும் வீடுகளில் எழுந்து வந்து சிலர் எட்டிப் பார்த்தார்கள். பாருவை ஆரத்திக்காக உஷார்ப் படுத்த முன்கூட்டியே ஓட்டமும் நடையுமாக எதிர்கொண்டு வந்த வசந்தி திண்ணையில் காமாட்சி மாமியைப் பார்த்து வியப்பும் திகைப்பும் அடைந்தாள்.

''என்ன மாமீ இது? இந்த உடம்போட நீங்க எதுக்கு இதெல்லாம் வந்து அலட்டிக்கறேள்..? போய்ப் படுத்துக்குங்கோ...''

''எனக்கு ஒடம்புக்கு ஒண்ணும் இல்லேடீ... வெள்ளிக் கிழமையும் அதுவுமாப் படுக்கையிலே விழுப்போடப் படுத்திண்டிருக்கப் பிடிக்கலே... வா... இப்பிடி உட்கார்ந்துக்கோ. ஆரத்தியை எடுத்துண்டு வரப் பாரு உள்ளே போயிருக்கா...''

உள்ளேயிருந்து பார்வதி மஞ்சள்நீர்த் தாம்பாளத்தோடு வந்தாள். காமாட்சியம்மாளை வாசலில் பார்த்ததும் எடுத்த எடுப்பில் 'கலியாணப் பெண்ணையும் பிள்ளையையும் வீட்டுக்குள் விடமாட்டேல்' என்று சண்டை போட்டுத் தடுக்கத்தான் அந்த உடல்நிலையையும் பொருட்படுத்தாமல் எழுந்து வந்து உட்கார்ந்திருக்கிறாளோ என்று முதலில் எண்ணித் தயங்கிய வசந்தி சிறிது பேச்சுக் கொடுத்துப் பார்த்த பின்பே மாமிக்கு இடைஞ்சல் செய்யும் எண்ணம் எதுவும் இல்லை என்பதையும் அவள் தானாகவே கொஞ்சம் மனம் மாறிச் சுமுகமான நிலைமையில்தான் வந்து உட்கார்ந்திருக்கிறாள் என்பதையும் புரிந்துகொண்டாள். காமாட்சியம்மாளின் இந்தச் சிறிதளவு மனமாற்றம்கூட வசந்திக்குப் பெரிய ஆச்சரியத்தை அளித்தது. எதிர்பாராத திருப்பமாகவும் இருந்தது.

ஊர்வலமும், மனிதர்களும் வீட்டை நெருங்கி வந்திருந்தனர்.

சர்மா, ரவி, கமலி, வேணுமாமா எல்லாருக்குமே காமாட்சியம்மாளை ஆரத்தித் தட்டுடன் வாசலில் பார்த்தது பெரிய ஆச்சரியமாயிருந்தது. ஆரத்தி சுற்றிக் கொட்டும் போது பாடும் பாட்டுக்காக மேளமும் நாகஸ்வரமும் சகல வாத்யங்களும் சில நிமிஷங்கள் ஒலிப்பது தவிர்த்து நின்றன. காமாட்சியம்மாளும் வசந்தியும்தான் ஆரத்திச் சுற்றிக் கொட்டினார்கள். காமாட்சியம்மாளே பாட்டும் பாடினாள்.

''பத்திரம்! வலது காலை எடுத்து முன்னே வச்ச



### சேப்பாக்கமும் விசுவநாதனும்:

விசுவநாதன் பாட்டிங்கில் சோபிப்பதற்குச் சேப்பாக்கம் மைதானம் பெருமளவு உதவியிருக்கிறது. முதன் முதலில் திலீப் கோப்பைப் பந்தயத்தில் 1969ல் சேப்பாக்கம் மைதானத்திலேதான் பிரசித்தி பெற்றார். லாயிட் கோஷ்டிக்கெதிராக - 1974-75ல் உன்னதமாக ஆடி, ஆட்டமிழக்காமல் 97 எடுத்துத் திரும்பினார். சேப்பாக்கம் இவரது செஞ்சுரியை இன்னும் காணவில்லை. அப்படியே தான் மச்சினன் கவாஸ்கரும். இவரும் இங்கு செஞ்சுரி காணவில்லை. இந்த ஆண்டு இவர்கள் இருவருமே செஞ்சுரி போட்டால் சேப்பாக்கம் ஓர் அதிசய ரிகார்டைக் காணும்.

- 'ராஜா'

உள்ளே வா'' — என்று காமாட்சியம்மாளே கமலிக்குச் சொல்லி அழைத்துக் கொண்டு போனது இன்னும் நம்ப முடியாததாக இருந்தது. யாரும் கவனிக்காமல் பேசாமல் கொள்ளாமல் விட்டுவிட்ட தனிமையில் தனக்குத் தானே நினைந்து நினைந்து காமு மெல்ல மனம் மாறியிருக்க வேண்டும் என்று நினைத்தார் சர்மா. காமாட்சியம்மாளே, ''ரெண்டு பேரும் இப்பிடி என் பின்னுடி வாங்கோ'' — என்று மணமக்களைத் தன் படுக்கையருகே அழைத்துச் சென்றாள். அதுதான் நல்ல சமயமென்று வேணுமாமா, ''இந்தாடா ரவி! அம்மாவை ஆசீர்வாதம் பண்ணச் சொல்லு!'' —என்று அட்சதை நிரம்பிய வெள்ளிக் கிண்ணத்தை அவனிடம் நீட்டினார்.

ரவி அட்சதையை அம்மா கையில் கொடுத்து விட்டுக் கமலியோடு அவளை நமஸ்காரம் செய்தான். ''தீர்க்காயுஸா இருக்கணும்'' — என்று அம்மாவின் மெல்லிய குரல் சாதகமாக ஒலித்ததுமே அவர்கள் மனத்தில் பாலை வார்த்தாற்போல இருந்தது.

தான் கறந்து வைத்திருந்த பாலில் தன் படுக்கையருகே வைத்திருந்த மலைப்பழங்களில் இரண்டு மூன்றை உரித்து விண்டு போட்டுக் கொஞ்சம் சர்க்கரையும் சேர்த்த பின், ''கல்யாணத்திலே பொண்ணுக்கும், மாப்பிள்ளைக்கும் பாலும் பழமும் கொடுக்கணும்னு சாஸ்திரம்டா! நான் அங்கேதான் வரமுடியலே. ...இந்தா! முதல்லே இரண்டு பேருமா இதைக் கொஞ்சம் சாப்பிடுங்கோ... சொல்றேன்''— என்று கமலிக்கும், ரவிக்கும் பாலும் பழமும் கொடுத்தாள் காமாட்சியம்மாள். அந்தப் பரிவு — ஒன்றுமே வித்தியாசமாக நடந்து விடாதது போன்ற காமாட்சியம்மாளின் அந்த அன்பு எல்லாம் ரவியையும், கமலியையும், மற்றவர்களையும் திணற அடித்தது.

திடீரென்று நின்று கொண்டிருக்கும் போதே தலைசுற்றி மயங்கி விழுவதுபோல் தள்ளாடும் அம்மாவை ரவி பாய்ந்து தாங்கிக் கொண்டான்.

''நீ சித்தே புருஷா பக்கம் போய் இருடாப்பா. இப்போ எனக்கு என் மாட்டுப் பொண்ணோடத் தனியா ரெண்டு வார்த்தை பேசணும்'' —

ரவி விலகிப்போய் மற்றவர்களோடு சேர்ந்து கொண்டான். தள்ளி நின்று கொண்டிருந்த கமலியை ஜாடை செய்து அருகே அழைத்தாள் காமாட்சியம்மாள். அப்படி அழைத்தபோது அவள் முகமும் பார்வையும் நிஷ்களங்கமாக இருந்தன. அதிகாலையில் தானே தொடுத்துத் தனக்கு வைத்துக்கொண்டது போக மீதியிருந்த பூவைப் பாருவிடம் எடுத்துக் கொண்டு வரச் சொல்லித் தன் கையாலேயே கமலிக்குச் சூட்டி விட்டாள்.

''நீ ரொம்பக் கெட்டிக்காரி... எல்லாம் உன் மனசு போலவே நடந்திருக்கு. எனக்கும் இப்போ இந்த நிமிஷம் உன் மேலேயோ அவன் மேலேயோ எந்த மனஸ்தாபமும் இல்லே. ஆனா மனஸ்தாபம் இருந்ததுங்கறது நிஜம். ஆனா இப்போ மனசு திருப்தியா நெறைஞ்சு இருக்கு. நீயும், என் புள்ளையும் தீர்க்காயுஸா — பகு சௌக்யமா இருப்பேள்' — அதிலே சந்தேகமில்லே. என்னமோ என் அக்ஞானம்... நான் முரண்டு பிடிச்சேன். குறுக்கே நின்னேன். இப்போ அதை நானே மறந்துட்டேன். நீயும் மறந்துடணும். மன்னிச்சிடணும்னு கூடச் சொல்வேன்.'' —

''ஐயையோ! நீங்கள் அப்படியெல்லாம் சொல்லக்



கூடாது; நான் ரொம்பச் சிறியவள். உங்களிடம் நிறையக் கற்றுக்கொள்ள வேண்டியவள். நான் யாரு உங்களை மன்னிக்க?''

''நீ அகந்தையில்லாதவள்... நிஜமான படிப்பாளி. அதுனாலேதான் நான் இத்தனை கடுமையாச் சோதனை பண்ணினப்புறமும் நீ பவ்யமா இப்படிச் சொல்றே. பரவாயில்லே... இப்போ உங்கிட்ட ஒண்ணே ஒண்ணு மட்டும் நான் வேண்டிக்கிறதுக்கு மீதம் இருக்கு.''...

''நீங்கள் வேண்டிக் கொள்ளக் கூடாது. உங்கள் மருமகளுக்கு நீங்கள் உத்தரவிட வேண்டும்.'' —

''நான் வேண்டுதல்னுதான் சொல்லுவேன்ம்மா.! நீ உத்தரவுன்னு எடுத்துண்டா அதைப்பத்திச் சந்தோஷப் படறேன். என் ஆசையெல்லாம் வேறொண்ணுமில்லே. என் பிள்ளையோட நீ இங்கேயே கிருஹ லட்சுமியா இருந்து இந்தாத்துலே பெற்றுப் பெருக்கி விளக்கேத்தணும்கறதுதான். இது கலப்புக் கல்யாணம். இங்கே இருக்கறவா — பார்க்கறவா — கொறை சொல்லிண்டே இருப்பான்னு தயங்கியோ பயந்தோ வேற தேசத்திலேயே நிரந்தரமா இருந்துடலாம்னு நீ நெனைக்கப் படாது. இங்கேயே இருந்து இந்தாத்திலே விளக்கேத்திண்டு வரணும். புருஷா அக்னி சந்தானம் ஒளபாசனம்னு பண்ணி நெருப்பு அணையாமக் காத்துண்டு வரமாதிரி இந்தக் குடும்பத்திலே பொண்டுகளும் தலைமுறை தலைமுறையா ஒரே வித்திலேருந்து வளர்ற துளசியைச் சம்ரட்சணம் செஞ்சு பூஜை பண்ணிண்டு வரோம். பூஜை பண்ண மனுஷா இல்லாம இந்தாத்துத் துளசிமாடம் ஒருகாலத்திலேயும் வாடப்பிடாது. அதிலே நாள் கிழமைகளில் மட்டுமில்லாமே எல்லா நாள்ளேயும் தீபம் பிரகாசிக்கணும்.

''இங்கே இந்தக் குடும்பத்தோட சௌபாக்கியங்களும், லட்சுமி கடாட்சங்களும், விருத்தியும் நாங்க பரம்பரையாச் சரீர சுத்தத்தோடேயும் அந்தரங்க சுத்தத்தோடேயும் பண்ணிண்டு வர துளசி பூஜையாலேன்னுதான் எங்களுக்கு நம்பிக்கை. நாங்க நல்ல நாள் தவறாமே விரத நியமம் தப்பாமே துளசி மாடத்திலே ஏத்தற விளக்குத்தான் இது வரை இந்தக் குடும்பத்தைப் பிரகாசப்படுத்திக் காப்பாத்திண்டு வரது. எத்தனையோ தலைமுறைக்கு முன்னே ராணி மங்கம்மா காலத்திலே விரத நியமம் தப்பாத ஒரு பிராம்மண சுமங்கலிக்குத் தானம் பண்ணணும்னு தைவெள்ளிக் கிழமையும் அதுவுமா சொக்கத் தங்கத்திலே பண்ணின சொர்ண விளக்கு ஒண்ணை வச்சுண்டு அந்த ராணி கிராமம் கிராமமாத் தேடிப் பார்த்தாளாம். கடைசியா அந்தச் சொர்ண தீபத்தை இந்தக் குடும்பத்து மாட்டுப் பொண் ஒருத்திதான் தானம் வாங்கிண்டாளாம். அன்னியிலேயிருந்து இந்தக் குடும்பத்து மாட்டுப் பொண்கள் ஒவ்வொருத்தரா அந்தச் சொர்ண தீபத்தையும் துளசி பூஜை பண்ற உரிமையையும் முந்தின தலைமுறைப் பெரியவா கிட்டேருந்து பரம்பரை பரம்பரையா அடைஞ்சிண்டு வரோம். இன்னிக்கும், நாளையும் தைவெள்ளிக் கிழமை தவறாமே நான் அந்தத் தங்க விளக்கைத் துளசி மாடத்திலே ஏத்தி வைக்கிறதுண்டு! இந்தா! இப்போ அதை நீ வாங்கிக்கோ. இனிமே நீ அந்தப் பூஜையைத் தொடர்ந்து பண்ணிண்டு வா'' — என்று காமாட்சியம்மாள் எழுந்திருந்து பெட்டியிலிருந்து அந்தத் தங்க விளக்கை எடுத்துத் திரியிட்டு ஏற்றிக் கமலியிடம் நீட்டினாள்.

''உங்கள் கட்டளைப்படியே இந்த வீட்டின் கிருகதீபம் அணையாமல் — துளசிமாடம் வாடாமல் இங்கிருந்து குடும்பம் நடத்தறேன். ஆனால் தயவுசெய்து நானும் 'இவரு'மாக ஒரே ஒருதடவை என் பெற்றோரைப் பார்த்து வருவதற்காகப் போய்வர மட்டும் அநுமதி தாருங்கள் அம்மா'' — என்று கூறி வணங்கி அந்தத் தீபத்தை இரண்டு கைகளாலும் அணையாமல் பயபக்தியோடு வாங்கிக் கொண்டாள் கமலி. காமாட்சியம்மாள் கமலியின் கோரிக்கைக்கு இணங்கினாள். அப்போது அவளுடைய கண்களில் நீர் நெகிழ்ந்தது. அவள் தளர்ச்சியோடு படுக்கையில் சாய்ந்து கொண்டாள். சிறிது தொலைவிலிருந்து வசந்தியும், ரவியும் இதைப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். சர்மா, வேணுமாமா முதலியோர் புரோஹிதருடன் கிருஹப் பிரவேசத்துக்கான வைதிக காரியங்களை ஆயத்தம் செய்து கொண்டிருந்தனர். பார்வதி அவர்களுக்கு ஒத்தாசை செய்து கொண்டிருந்தாள். குமார் அப்போது தான் தூங்கி எழுந்திருந்து தோட்டத்துக் கிணற்றுக்கு நீராடப் போயிருந்தான். பலபல வென்று விடிந்து ஒளிபரவிக் கொண்டிருந்தது.

காமாட்சியம்மாள் ஏற்றிக் கொடுத்த தீபத்தை அப்படியே கைகளில் ஏந்தியபடி பின்புறம் கிணற்றடியில் துளசி மாடத்துக்குச் சென்றாள் கமலி. அடுத்த சில விநாடிகளில், துளசி மாடத்தருகே இருந்து.

''துளசீ! ஸ்ரீசகி சுபே பாபஹாரிணி புண்யதே
நமஸ்தே நாரத நுதே நாராயண நம:
ப்ரியே...'' — என்ற கமலியின் இனிய குரல் ஒலிக்கத் தொடங்கியது. அவள் துளசி பூஜையை முடித்துக்கொண்டு உட்பக்கம் திரும்பியபோது கூடத்தில் இயல்பை மீறிய அமைதி நிலவியது. ரவி, சர்மா, வேணுமாமா வசந்தி, பார்வதி குமார் எல்லாரும் காமாட்சியம்மாளின் படுக்கையருகே கூட்டமாக நின்று கொண்டிருந்தார்கள். கமலியும் அங்கே விரைந்தாள். காமாட்சியம்மாள் மயங்கினாற் போலப் படுக்கையில் சாய்ந்து துவண்டு கிடந்தாள்.

---

''மறுபடியும் காஸெட்டை கேட்க ஆரம்பிக்கட்டுமா மஞ்சு?''
''இல்லே சார்!''
''என்ன இல்லே... ''யுவர் சார்! தேங்க் யூ பார் யுவர் லெட்டர் டேட்டட் டே டேவேல் பார்த்து தரீ...ன்னு டைப் அடிச்சிருக்கியே...''
- தோ

சர்மா காமாட்சியம்மாளின் பொன்நிற உள்ளங்காலில் சூடுபறக்கத் தேய்த்துக் கொண்டிருந்தார். எல்லார் முகத்திலும் கவலையும் பரபரப்பும் தெரிந்தன. ரவி அம்மாவின் கையைப் பிடித்து 'பல்ஸ்' பார்த்துக் கொண்டிருந்தான். வேணுமாமா குமாரைக் கூப்பிட்டு, ''டாக்டரைக் கூப்பிட்டுண்டுவா! ஓடு! வாசல்லே கார் நிக்கறது. உங்கம்மாவுக்கு இங்கிலீஷ் டாக்டர்னுப் பிடிக்காது. ஆனாலும் பரவாயில்லே. வடக்குத் தெருவுக்குப் போய் எங்காத்துக்கு நாலு வீடு தள்ளி இருக்கற டாக்டரைக் கூட்டிண்டு ஓடிவா'' — என்று அவனை அவசர அவசரமாகத் துரத்தினார். குமார் ஓடினான். பார்வதி அதற்குள்ளேயே பயந்து அழத் தொடங்கியிருந்தாள். சர்மா காலைத் தேய்ப்பதை நிறுத்தி விட்டு வேணுமாமாவையும் ரவியையும் நோக்கி உதட்டைப் பிதுக்கினார். நேரே பூஜை அறைக்குப்போய் இது மாதிரிச் சந்தர்ப்பங்களில் பயன்படுத்துவதற்கென்று காசிச் செம்பில் சேமித்து வைக்கப் பட்டிருந்த கங்காத் தீர்த்தத்தைக் கொண்டு வந்து காமாட்சியம்மாளின் வாயில் இரண்டு உத்திரணியளவு சேர்த்தார். தீர்த்தம் கடைவாயிலும் கன்னங்களிலும் வழிந்தது.

அதுவரை அமைதியாகப் பொறுத்துக் கொண்டிருந்த சர்மா சிறுகுழந்தை போல் கோவென்று கதறியழுதார்.

''கொடுத்துவச்ச மகராசி! வெள்ளிக் கிழமையும் அதுவுமாப் பார்த்துப் பூவும் குங்குமமுமாப் போய்ச் சேர்ந்துட்டா'' — என்று இருநூறப் பிரவேசத்துக்கு வந்திருந்த பட்டினத்து வாத்தியார் தம் உதவியாளரின் காதருகே மெல்ல முணுமுணுத்துக் கொண்டிருந்தார். ரவிக்குக் கண் கலங்கியது. கமலி, வசந்தி, எல்லாருமே வாய்விட்டு அழுது விட்டார்கள்.

துளசி மாடத்தில் அந்தக் குடும்பத்தின் குலவிளக்கான புராதனமான சொர்ணதீபம் சுடர்விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்த போது இருநூறு தீபமாக விளங்கிய காமாட்சியம்மாள் ஏதோ வீட்டுக்கு மருமகள் வந்ததும் அவளிடம் சொல்லிக் கொண்டுபோவதற்காகவே காத்திருந்ததுபோல் போய்ச் சேர்ந்திருந்தாள். வசந்தி கமலியின் காதருகே மெல்லச் சொன்னாள்: — ''மாமி உங்களை ஆசீர்வாதம் பண்ணிட்டுப் போகணும்னே காத்துண்டு இருந்த மாதிரின்னு இருந்துட்டுப் போயிட்டா...?'' —

கமலியால் இதற்குப் பதில் சொல்ல முடியவில்லை. மேலும் வாய்விட்டு விசும்பி அழத் தொடங்கி விட்டாள் அவள்.

''அழாதேடீ கமலி! நீ ரவியைக் கல்யாணம் பண்ணிண்டு உங்க நாட்டோடப் போயிடுவியோங்கறதுதான் சதா மாமியோட கவலையா இருந்துது. உங்கிட்ட என்ன சொன்னா மாமி?''

''நான் இங்கேயே இருந்து குடும்பம் நடத்தி இந்தத் துளசி பூஜையை விடாமப் பண்ணணும்னு என்னிடம் வாக்கு வாங்கிக் கொண்டு அந்தத் தங்க விளக்கை எடுத்துக் கொடுத்தாள்.'' —

''பின்னே என்ன? மாமிக்குக் குடுத்த வாக்கைக் காப்பாத்து! அந்தத் துளசிச் செடி வாடாமயும், விளக்கு அணையாமயும் பார்த்துக்கோ'' — என்று உணர்ச்சி பொங்கும் குரலில் கமலிக்குப் பதில் சொன்னாள் வசந்தி.

சங்கர மங்கலத்தில் பொழுது நன்றாக விடிந்து சூரியனின் கதிரொளி கோவில் கோபுரகலசங்களில் பட்டு மின்னத் தொடங்கியிருந்தது.



கிரிக்கெட்டில் 'டக் பேர்' என்று கேள்விப் பட்டிருக்கிறீர்களா?

இரண்டு இன்னிங்ஸிலும் முதல் பந்திலேயே அவுட்டாகி விட்டால் அதை 'டக் பேர்' என்கிறார்கள்.

—லண்டே
—முந்து

## முடிவுரை :

நம்மைச்சுற்றி உலகெங்கும் 'Transfer of values' (மதிப்பீடுகளின் மாறுதல்) மதங்களையும், சமய நம்பிக்கைகளையும் பூர்விகமான கலாசாரப் பழக்க வழக்கங்களையும் மெல்ல அசைத்துக் கொண்டு இருந்தாலும் ஏதோ ஒருவகையில் ஓரிடத்திலிருந்து பாயும் நீர்ப்பெருக்கு மற்றோரிடத்தில் சென்று தவிர்க்க முடியாதபடி நனைத்துப் பாய்ந்து பரவுவது போல் கலாசாரப் பரிமாற்றம் (Cultural Exchange) அல்லது கலாசார மடைமாற்றங்கள் (Cultural transformation) நடைபெற்றுக் கொண்டு தான் இருக்கின்றன. அதை யாராலும் அழித்துவிட முடியாது.

இக்கதையில் கமலியும், ரவியும், அந்தக் கலாசாரப் பரிமாற்றங்களின் சின்னங்களே. ஆயிரம் வேறுபாடு இருந்தாலும் பாசமும் அரவணைத்து ஏற்றுக் கொள்வதுமே முடிவாக இந்தியத் தாய்மார்களின் நிறைவான பண்பு என்பதைத் தன் வாழ்விலும், மரணத்திலும் ஒருசேர நிரூபிக்கிறாள் காமாட்சியம்மாள்.

பண்பாடு என்பது பரவலாகும்போது வெறும் தேசிய அடையாளப் புள்ளி நீங்கி 'மானிடம்' என்ற சர்வ தேசிய அடையாளம் உடனே வருகிறது. இந்தக் கதை 'சங்கர மங்கலம்' என்ற ஒரு சின்ன கிராமத்தில் நடந்தாலும் இதில் வரும் மனிதர்கள் அந்தக் கிராமத்தை விடப் பரந்த உலகத்தைப் பாதிப்பவர்கள், பாதித்தவர்கள், பாதிக்கப்போகிறவர்கள்.

# உழவர்களின் நட்பே எங்கள் உயர்வுக்கு அடிப்படை

உழவர் திருநாளான பொங்கல் திருநாளை உழவர்களுடன் கொண்டாடுவதில் MFL இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிறது.

பயிர்களின் செழுமையான வளர்ச்சிக்கு சூரிய ஒளி எவ்வளவு முக்கியமோ, அதைப் போலவே MFL நிறுவனமும் அதிக முக்கியத்துவம் வாய்ந்தது. உழவர்களின் முன்னேற்றத்திற்காகப் பாடுபடுவதில் MFL அளவில்லாத பெருமிதம் கொள்கிறது. உழவர்களின் வாழ்க்கையோடு தன்னைப் பிணைத்துக் கொண்டுள்ள MFL அவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்ற தனது நீண்ட நாள் திட்டத்தை செயல்படுத்துகிறது.

எல்லாத் துறைகளிலும் வேகமாக முன்னேறி வரும் நாம் உழவுத்துறையில் சாதிக்க வேண்டியவை எத்தனையோ? அதற்காகவே தன்னை அர்ப்பணித்துக் கொண்டு, கிராம முன்னேற்றமே தன் குறிக்கோளாய்க் கொண்டு பாடுபட்டு வரும் MFL, இனிவரும் ஒவ்வொரு பொங்கல் திருநாளையும் உழவர்கள் தன்னிறைவுடன் குதூகலத்துடன் கொண்டாட உதவுவதென உறுதி கொண்டிருக்கிறது. இந்த உறுதியை இந்த வருடம் பொங்கல் பரிசாக உழவர்களுக்குத் தருவதில் MFL பெருமிதம் அடைகிறது.

**உழவுக்கு கை கொடுப்போம்-**
**நம் உயர்வுக்கு வழி வகுப்போம்**






மதராஸ்
பாடிலைசர்ஸ்
லிமிடெட்
மணலி சென்னை 600 068




Interpub/MFL



கடலின் நீலவிழி கரிய மேகமணி
　　கமழும் வாசமலர்க் கூந்தலாள் — உயர்
கவிதைபா டும்இரு சிலம்பு பூண்டதிரு
　　கால்கள் கொண்டதொரு கனியினள்
உடலின் மோகநடம் உருகும் வண்ணஇடை
　　ஓங்கி நிற்கும்இரு மார்பினள் — இந்த
உலகம் யாவும்அவள் வடிவமானதென
　　உலவி யாடிவரும் அழகினள்!

மாடக்கூ டல்நகர் மருவுபே ரழகை
　　மனதில் எண்ணிநிதம் மருகினேன் — மா
மாயக்கண் மலரில் தோயும் பேரருளே
　　மன்றில் கொண்டுவர உருகினேன்
ஆடு தோரணங்கள் வாசல் பொற்கதவு
　　அங்கயற் கண்மகளின் கோவிலில் — நல்
அந்தி சாயும்வரை நின்று நின்றுஎனை
　　அன்ப னுக்கிசை பாடினேன்!

சோம சுந்தரனைச் சுழலவைத் தமயில்
　　தோகை கண்டுமனம் துள்ளினேன் — உயர்
சுந்தரக் கிளியின் மந்திரப் புகழை
　　சொல்லிச் சொல்லிநட மாடினேன்
காமவல்லி சுகவாணி ராணி அவள்
　　கருணைக்கா கநிதம் ஏங்கினேன் — என்
கவிதை எங்கும்அவள் வைரமின் னலென
　　காட்சி தந்ததனைக் காண்கிறேன்!

குதிரை விற்றவனைக் கூடிவிட் டவனை
　　குரல்கொடுத் துநிதம் ஏற்றினேன்
கொஞ்சும் என்தமிழில் வஞ்சிதன் புகழை
　　கொண்டு கொண்டுநிதம் ஊற்றினேன்
மதுரைமீன் விழியின் மதுவைப்போல் மொழியை
　　மயங்கிச் சாயும்வரை பருகினேன் — அவள்
மஞ்சள் வெய்யிலிலும் குங்குமத் தினிலும்
　　மலரைப்போல் விழுந்து கருகினேன்!

மலைய நாடன்பெற் றஇளைய தோகைமயில்
　　வருகிறாள்; உதவி தருகிறாள் — தமிழ்
மங்கையர்க் கரசிதங்க மேனியுடன்
　　வளர்கிறாள்; மனதில் குழைகிறாள்
அலைகள் ஆடும்அ வள்சிலை யினெடுஎனை
　　அமைக்கிறேன்; கவிதை சமைக்கிறேன் — பல
ஆயிரம் பிறவி தான்வரும் எனினும்
　　மறக்கிலேன்; அவளை மறக்கிலேன்!



# குளிர்காலக் குழந்தை

அகிலன்

மழைக் காலத்தில் பெய்ய வேண்டிய மழை தன் கடமையை மறந்து தூக்கம் போட்டுவிட்டுத் திடீரென்று குளிர் காலத்தில் விழித்துக் கொண்டு கொட்டோ கொட்டென்று கொட்டித் தீர்த்தது. சென்னை நகரத்துக்குச் சரியான ஜலதோஷம். பள்ளமான பகுதிகளிலிருந்த சாலைகளெல்லாம் சிற்றாறுகளாகவும் கால்வாய்களாகவும் மாறி விட்டன. பொட்டல்களெல்லாம் ஏரிகளாகவும் குளம் குட்டைகளாகவும் மாறிவிட்டன. வீடுகள் தெப்பங்களாய்க் காட்சி யளித்தன.

ஆனால் டாக்டர் சபேசனுக்கு இந்தக் கவலையெல்லாம் கிடையாது. அளவுக்கு மீறிய முன்யோசனைக்காரர் அவர். நாற்பதாண்டுகளுக்கு முன்பே தமக்கு மூன்றாவது குழந்தை பிறந்த உடனேயே அறுவைச் சிகிச்சை செய்து கொண்டவர் என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்! மேட்டுப்பாங்கான இடமாகப் பார்த்துக் காற்றோட்டத்துக்காக மிக விசாலமான இடமாகத்தேர்ந்தெடுத்து, தமது பங்களாவை அவர் கட்டிக் கொண்டிருந்தார்.

அப்போது இரவு பதினொரு மணி. இரண்டாவது மாடியிலிருந்த மேசையின் முன் உட்கார்ந்து அவர் ஏதோ ஒரு கருத்தரங்குக் கட்டுரையைச் சரி பார்த்துக் கொண்டிருந்தார். பிரான்ஸின் தலைநகரான பாரிஸில் நடக்கவிருந்த குழந்தைகள் நல மாநாட்டுக்காகத் தயாரிக்கப்பட்ட கட்டுரை அது. குழந்தைகள் நலம் பற்றிய அறிவிலும் ஆராய்ச்சியிலும் உலகத்திலுள்ள விரல்விட்டு எண்ணக்கூடிய நிபுணர்களில் ஒருவர் அவர். ஒருநாளைக்கு அமெரிக்கா மறுநாள் இங்கிலாந்து, அடுத்தநாள் ஜப்பான் என்று அடிக்கடி பறந்து திரிய வேண்டிய நெருக்கடி இப்போது அவருக்கு வந்துவிட்டது. இந்த அறுபத்தைந்து வயதுக்குள்ளேயே அவர் தலை முழுவதும் வழுக்கையாகி விட்டது, ஒரு வகையில் அவருடைய கடுமையான உழைப்பிலும் சிந்தனையிலும் ஏற்பட்டதாக இருக்க வேண்டும்.

அடுத்த அறையில் அவர் மனைவி கமலா படுத்திருந்தாள். இடையிடையே அவள் இருமும் சத்தம் டாக்டருக்குக் கேட்டது. கமலாவுக்கு அறுபது வயதாகிறது. இருபது வருடங்களாகவே அவள் லிவர் நோயாளி. ஒன்று போனால் ஒன்று வந்துவிடும். மாத்திரைகள், காப்ஸ்யூல்கள், ஸிரப்புகள், ஊசிகள், இவற்றை மாற்றி மாற்றிப் போட்டுக் கொள்வாள்.

கருத்தரங்கக் கட்டுரையில் மனம் செல்லவில்லை டாக்டருக்கு. கணப்புச் சூடு அதிகமாக இருந்ததால் உடம்பு எரிச்சல் எடுத்தது. சட்டென்று எழுந்து மின் கணப்பை அணைக்கப் போனார். அணைத்தும் விட்டார். ஆனால் அதே சமயம் நெஞ்சுக்குள் சுளுக்கிக் கொண்டது போல், மின்னல் வெட்டியது போல், பளிச் சென்று ஒரு வலி ஏற்பட்டது. தாங்க முடியாத வலி — ஆனால் ஒரு கணத்தில் அந்த வலி நின்றுவிட்டது.

அந்த ஒரு கணத்து வலி அவர் உயிரைத் திடீரென்று பறித்துக் கொண்டு மீண்டும் அவரிடமே திருப்பிக் கொடுத்து விட்டது.

டாக்டர் எழுந்தார். மார்பின் இடதுபுறத்தில் கையை வைத்தபடியே மெல்ல நடந்து வந்து வராந்தாப் பக்கம் நின்றார். வெளியே மழை ஓய்ந்த பாடில்லை. தெருவில் ‘கேட்’ விளக்கு எரிந்து கொண்டிருந்தது. கூர்க்கா தனக்காகக் கட்டிய கூண்டுக்குள் சிறைக் கைதிபோல் உட்கார்ந்து கொண்டிருந்தான். இரவில் கண்விழித்துக் காவல் காப்பதற்குத்தான் அவனுக்குச் சம்பளம். பகலில் வேறொருவன் வருவான்.

கார்கள் இரண்டும் ‘காரே’ஜுக்குள் நின்றன. அவருக்கொன்று; அவர் மனைவிக்கொன்று. தோட்டத்துப் பூங்கா மழையில் முழுகிக் குளித்துக் கொண்டிருந்தது. அந்தக் காலத்தில் பத்து கிரவுண்ட் நிலத்தை வளைத்துப் பிடித்து வாங்கிப் போட்டு வீடு கட்டினார். இடையில் திடீரென்று அதற்குத் தொல்லை வரும் போலிருந்தது. நகர்ப்புற நிலவுடைமைக் கட்டுப்பாடுச் சட்டம் என்ற ஒன்றைக் கொண்டுவந்து பயமுறுத்தினார்கள். பிறகு எப்படியோ அந்தச் சட்டம் தலையை உள்ளுக்கு இழுத்தபடி பதுங்கிக் கொண்டது. அதை நினைத்து “அப்பாடா!” என்று பெருமூச்சு விட்டபடி மறுபடியும் அறைக்கு வந்தார் சபேசன். சோபாவில் விழுந்தார்.

இருபத்தைந்து இருபத்தைந்தாகவும், பிறகு ஐம்பது ஐம்பதாகவும், பிறகு நூறு

**நாட் அவுட் !**

**ஸி. கே. நாயுடு இந்தியக் கிரிக்கெட்டின் தந்தை என்று புகழ் பெற்றவர். அவரைத் திடீரென்று பாரிச வாயு தாக்கி விட்டது. இதனால் அவரை ஆஸ்பத்திரியில் கொண்டு சேர்த்தார்கள். அவர் ஆஸ்பத்திரியில் பிரக்ஞை பெற்றதும் முதலில் சொன்ன வார்த்தைகள்: “நான் இன்னும் நாட் அவுட்!”**



நூறாகவும் அவர் சம்பாதித்த பணத்தைக் கொண்டு தேடிய சொத்துக்கள் அவை. பணத்துக்கு மதிப்பிருந்த காலத்தில் ஒரு குழந்தையை ஒருமுறை பார்ப்பதற்கு அவர் வைத்திருந்த 'ரேட்' அது. பிறகு ஐம்பதாக வும் நூறாகவும் அது வளர்ந்துவிட்டது. சபே சன் ஒருவகையில் சமதர்ம வாதி. ஏழையாக இருந்தாலும் பணக்காரராக இருந்தாலும் அவருக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டால் வித்தியாசம் பார்க் காமல் மருத்துவ ஆலோசனை சொல்வார்.

வருமான வரி கட்டுவதிலும் அவருக்கு அவ்வளவாக நம்பிக்கையில்லை. பொதுமக்க ளின் வரிப்பணத்தைக் கசக்கிப் பிழிந்து வாங்கி, அரசாங்கத்தார் வெள்ளை யானைக் கூட்டத்தை வேலைக்கு வைத்துக் கொண்டு வீண் விரயம் செய்கிறார்கள் என்பது அவரது திடமான நம்பிக்கை. ஏதோ பெயருக்குக் கட்டி வைப்பார், அவர்கள் விடமாட்டார்கள் என்பதால்.

இப்படி நெஞ்சிலே வலி வந்து ஒரு தட்டுத் தட்டிவிட்டுப் போகும் போதெல்லாம் அவ ருக்குள் ஒருவகை விரக்தி உணர்ச்சி ஏற்படும். 'ஐம்பது லட்சத்துக்குமேல் சொத்துச் சேர்த் தாகிவிட்டது. இருந்தாலும் ருசியாகச் சாப் பிடமுடியவில்லை. கண்ணுக்குக் கண்ணாடி போட்டும் கட்டுப்படியாகவில்லை. நரம்புத் தளர்ச்சி ஆளைக் கால்வாசியாக்கி விட்டது. கை, கால், காது, மூக்கு, எந்த அவயவமும் அதனதன் வேலையை ஒழுங்காய்ச் செய்வ தில்லை. மருந்துகளால் என்னதான் முடி கிறது? நாளெல்லாம் விமானத்தில் பறந்து போய்ப் புகழும் பொருளும் தேடி என்ன சுகம் கண்டோம்?''

டாக்டர் சபேசன் தம்முடைய உடம்பைக் கவனிப்பதற்கென்று ராமசாமி என்ற மற் றொரு டாக்டரை வைத்திருந்தார். தேவை யானபோது அவருக்கு போன் செய்து காரை அனுப்பி வரவழைப்பார். ராமசாமி மருத்து வத்தில் நல்ல தேர்ச்சி பெற்ற நிபுணர். உண்மையாகவும் உழைப்பார். ஆனால் பிழைக்கத் தெரியாதவர். நோயாளிகள் கொடுப்பதைக் கொடுத்தபோது வாங்கிக் கொள்வார். ஏழை எளியவர்களிடையே மிகவும் பிரபலமானவர் அவர்.



''எனக்குத் திடீர்னு 'ஹார்ட் அட்டாக்' வந்திட்டா என்ன செய்யறது? கடைசிப் பயலைத்தவிர மற்ற பிள்ளைகளுக்கு என்னோட சொத்திலே துளிக்கூட நாட்டமில்லே. கடைசிப்பிள்ளையோ ஊதாரி... '' என்று ஒருமுறை ராமசாமியிடம் தமது பிரச்னையை வெளியிட்டார் சபேசன்.

''உங்க நிலைமையிலே நான் இருந்தா, ஏழைக் குழந்தைகளுக்கு ஒரு ஆஸ்பத்திரி கட்டி, இலவசமா வைத்தியத்தை ஆரம்பிச்சுடுவேன்'' என்று சட்டென்று உற்சாகமாய்ப் பதிலளித்தார் ராமசாமி.

சபேசனுக்கு இந்த யோசனை கொஞ்சங்கூடப் பிடிக்கவில்லை. ''அறிவோ, எதிர்காலத்தைப் பற்றிய திட்டமோ இல்லாமல், பெறத் தெரியாமல் அளவுக்கு மீறிப்பெற்று, வளர்க்கத் தெரியாமல் வளர்க்கறவுங்களுக்காக நாம் ஏன் சிரமப்படணும்?''

''ஏழைகளுக்காக மட்டும் நான் இதைச் சொல்லலே. உங்களோட பிரச்னைக்கு இது உதவி செய்யும்.''

''என்னோட பிரச்னைக்கா?''

''உங்களுக்கு இப்போ உள்ள பிரச்னை' ப்ராப்ளம் ஆப் பிளண்ட்டி; ப்ராப்ளம் ஆப் அஃப்ளுயன்ஸ்'; அதாவது உங்களோட தொல்லை — இப்போ தேவைக்கு அதிகமான சொத்து. அது மாத்திரமில்லே; உங்களோட அறிவு, திறமை, உழைப்பு எல்லாமே இது வரையில் ஒரு சின்னஞ்சிறு வட்டத்துக்குள்ளேயே இருந்திருக்கு. உங்களோட சொத்தும் உழைப்பும் சேர்ந்தா ஒரு பெரிய ஆஸ்பத்திரியை நாம கட்டிடலாம்.''

இந்த யோசனையை டாக்டர் ராமசாமி வெளியிட்டதற்காக அவருக்குக் கைமேல் பலன் கிடைத்தது. மீண்டும் அவரைக் கூப்பிடுவதை அடியோடு நிறுத்திவிட்டுத் தம் உடல் நலனைக் கவனிக்க வேறு ஒரு டாக்டரை அமர்த்திக் கொண்டார் சபேசன். ஆனால்

அறிவிப்பாளர் ''வார் டிக்ளேர்ட்'' என்றார். ரேடியோ நிலையத்துக்கு டெலிபோன்களும் கடிதங்களும் பறந்தன. ''எந்த தேசங்கள் ஒன்றோடொன்று சண்டை இடுகின்றன?'' என்று கேட்டு. ''மிடில்செக்ஸ் காப்டன் வார் தமது இன்னிங்ஸை டிக்ளேர் செய்தார்'' என்று பதில் சொல்லிச் சொல்லி ரேடியோ நிலையத்துக்கு அலுத்துப் போய்விட்டது!

ருக்மணி ராமச்சந்திரன்.



இந்த அடுத்த டாக்டர் வந்தபிறகு நெஞ்சு வலியும் அடிக்கடி வந்து விடுகிறது! ராமசாமி இதை எவ்வளவோ கட்டுப்படுத்தி வைத்திருந்தார்.

ஒருவேளை ராமசாமி சொல்வதில் உண்மையிருக்குமோ என்றுகூட யோசிக்கலானார் சபேசன். ராமசாமிக்கு ஒரு வீடு இருந்தது. ஒரு ஸ்கூட்டர் இருந்தது. நாலைந்து குழந்தை குட்டிகள். அவர் ஏழையுமில்லை; பணக்காரருமில்லை. ஆனால் எப்போதும் சுறுசுறுப்பு, கலகலப்பு, புன்முறுவல் — எப்படி அவரால் அப்படி இருக்க முடிகிறது?

'நாளைக்கு அவரை வைத்தியத்துக்குக் கூப்பிட வேண்டியதுதான்' என்று முடிவு செய்து கொண்டு, மாடி வராந்தாவை நோக்கி நடந்தார் சபேசன். மழை சற்று விட்டிருந்தது. தூரத்தில் தெரிந்த குடிசைகள் நிறைந்த குப்பம் ஒன்றை ஊடுருவினார். தெருவில் மின்விளக்குகள் எரிந்ததால், மங்கலான வெளிச்சத்துக்கிடையே குப்பம் அதைச் சூழ்ந்துள்ள வெள்ளத்தில் மிதப்பது போல் தோன்றியது. அங்கிருந்துதான் அவர் வீட்டு வேலைக்காரிகளில் ஒருத்தி தினந்தோறும் வேலைக்கு வருவதாய் அவர் மனைவி கமலா சொல்லியிருந்தார்.

வீட்டோடு இருப்பவர்கள் சமையல் செய்யும் மீனாட்சியும் வேலைக்கார முனியப்பனும். அவர்களைத் தவிர வெளியிலிருந்து இரண்டு பேர் அன்றாடம் வந்துபோய்க் கொண்டிருந்தார்கள்

அவர்களில் ஒருத்திதான் லட்சுமி. அந்தக் குப்பத்துக் குடிசை யொன்றில் தன் கணவன் கண்ணாயிரத்துடனும் ஏழுகுழந்தைகளுடனும் வசித்து வருகிறாள். லட்சுமிக்குச் சந்தான லட்சுமி என்று பெயர் வைத்திருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும். ஆனால் வேறு பெயர்களுள்ள பல சந்தான லட்சுமிகளும் அவளுக்கு அக்கம்பக்கத்திலும் சுற்றுப் புறங்களிலும் இருக்கத்தான் செய்தார்கள்.

குப்பத்தைச் சுற்றிலும் தண்ணீர். இடுப்பளவுத் தண்ணீரில் நீந்தித்தான் லட்சுமி வீட்டுக்குள் நுழைய வேண்டும். மேலும் தண்ணீர் பெருகிக் குடிசைக்குள் புகுந்து விடாதபடி, மாநகராட்சிக்காரர்கள் மோட்டார் வைத்து நீரை வெளியில் இறைத்து விட்டபடி இருந்தார்கள்.

குடிசையின் அளவு பத்துக்கு இருபதடி. குடிசை மாற்று வாரியத்துக் காரர்கள் வந்து குடும்பம் குடும்பமாகப் புகைப்படம் எடுத்த போது, லட்சுமியும் வீட்டில் இல்லை. கண்ணாயிரமும் இல்லை. இருந்திருந்தால் ஒருவேளை அவர்களுக்கு வாரியத்தின் மாடிவீட்டில் ஓர் அறை கிடைத்திருக்கும். வாரியத்துக் காரர்களைக் குறை சொல்லியும் பயன் இல்லை. ஆயிரம் குடும்பங்களுக்கு அவர்கள் வீடுகள் கட்ட முனைவதற்குள், மூவாயிரம் புதுக் குடிசைகள் முளைத்து விடுகின்றனவாம்.

எது எப்படியிருந்தாலும் இப்போது லட்சுமி வாழ்ந்த குப்பம் தெப்பமாக இருந்தது. இருபதுக்குப் பத்துக்குள் உள்ள குடிசையில் மொத்தம் ஒன்பது பேருக்குச் சமையல், சாப்பாடு படுக்கை எல்லாம் நடந்தாக வேண்டும்.

நல்லவேளை, பெரிய பையன்கள் இரண்டுபேரும் வீட்டுக்கு வருவதில்லை. எங்கேயோ உழைத்தார்கள், எப்படியோ சாப்பிட்டார்கள்; வேறு எங்கோ படுத்துக் கொண்டார்கள்.

லட்சுமியின் வீட்டுக்காரன் கண்ணுயிரத்துக்குக் காய்கறி வியாபாரம். கொத்தவால் சாவடியில் வாங்கி வந்து, வண்டியில் பரப்பி வைத்து, மயிலாப்பூரில் விற்று வருவான். மழை பிடித்துக் கொண்டதால் காய்கறி வியாபாரமும் படுத்துவிட்டது. லட்சுமிக்கு டாக்டர் சபேசன் வீட்டில் பாத்திரம் பண்டம் தேய்த்துத் துணி துவைக்கும் வேலை. மாதம் இருபது சம்பளம்.

குடிசைக்குள் குளிர் நடுக்கி எடுத்தது. தரையில் கால் வைக்க முடியவில்லை. சாக்குகள் ஈரமாகி விட்டன. இருந்த ஒரு கயிற்றுக் கட்டிலில் மூன்று குழந்தைகளை நெருக்கியடித்துக் கொண்டு படுக்கச் செய்தாள் லட்சுமி. பிறகு கட்டிலுக்குக் கீழே சாக்குகளையும் பழைய பாய்களையும் விரித்து மற்ற இருவரையும் படுக்கச் சொன்னாள்.

பிள்ளைகள் எல்லாம் எப்படியோ முடக்கிக் கொண்டு விட்டார்கள். சற்று நேரத்தில் தூங்கியும் விட்டார்கள். கண்ணுயிரம் கைகளால் முழங்கால்களைத் தட்டிக் கொண்டு அடுப்படிச் சுட்டுக்கருகில் உட்கார்ந்திருந்தான். அவன் உடம்பு வெடவெடவென்று நடுங்கியது. லட்சுமி மண்பானை ஒன்றுக்குள் மடித்து வைக்கப்பட்டிருந்த கிழிந்த புடவைகள் இரண்டை வெளியில் எடுத்தாள். தரையில் ஏற்கெனவே விரிக்கப்பட்டிருந்த கோரைப் பாயின்மீது அவற்றைப் பரப்பினாள். தன் கணவனை அதில் படுக்கச் சொன்னாள். அடுப்பு மேடைமேல் எரிந்து கொண்டிருந்த சிம்னி விளக்கை ஊதி அணைத்தாள்.

குளிர், தாங்க முடியாத குளிர்...

இருந்த எல்லாத் துணிகளையும் குழந்தைகளுக்குக் கீழேயும் மேலேயும் போட்டாயிற்று.

பாயின்மேல் விரிக்கப்பட்ட கிழிந்த புடவைகளைத் தவிர, அவர்கள் உடுத்துக் கொண்டிருந்த துணிகளைத் தவிர, வேறே எதுவும் அவர்களிடமில்லை. ஒரு வாரத்து அடைமழையும் குடிசையைச் சூழ்ந்திருந்த தண்ணீரும் அவர்களைக் குளிரால் வெடவெடக்கச் செய்தன.

அந்தக் குடும்பத்தில் உழைத்துச் சம்பாதித்தவர்கள் நான்குபேர். பெரியவர்கள் இருவரையும் விட்டால் பையன்களில் ஒருவன் சைக்கிள் கடையில் மாதம் பதினைந்து ரூபாய்க்கு இடுப்பொடிய வேலை செய்தான். மற்றொரு பையன் - தகப்பனோடு மார்க்கெட்டுக்குப் போவது, காய்கறி வியாபாரத்தைக் கவனிப்பது ஆகியவற்றைக் கவனித்தான். இப்படியிருந்தும் அவர்களால் தங்களுக்கு வேண்டிய படுக்கைகளோ போர்வைகளோ வாங்கிக் கொள்ள முடியவில்லை.

லட்சுமி தன் குளிர் தாங்காமல் தன் கணவனின் கையைப் பற்றினாள். கண்ணுயிரத்துக்கும் லட்சுமியையே தனக்குப் போர்வையாக்கிக் கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. வழியே இல்லை.



**மண்டை படிப்பந்து**

வாட்ட சாட்டமான ஆள் ஹால் பந்து வீசினால் ஓரளவு தாக்குப் பிடிக்கலாம். ஆனால் பயங்கரப் பந்து வீச்சாளர் கில்கிறைஸ்டின் பந்தைத் தாக்க விட்டு விட்டால் நேராக மண்டையைத்தான் மோதும். ஆனால் இந்த ஹால் - கில்கிறைஸ்ட் பயங்கரப் பந்து வீச்சில் நன்றாக ஆடி போர்டே முன்னுக்கு வந்தார். சென்னையில் ஸ்டேடியத்தில் அவரது 56 ரன்கள் தோல்வி கிடைத்தும் ஆறுதல் அளித்த விஷயம். அடுத்த டெஸ்டில் டெல்லியில் போர்டே இரு சதங்கள் எடுத்தது குறிப்பிடத்தக்க சாதனை. 1966-67ல் காப்டன் ஸோபர்ஸ் குழுவுக்கெதிராக இப்படி போர்டே அபாரமாக ஆடினார். அதன் பிறகுதான் போர்டேயின் வீழ்ச்சி தொடங்கியது.

ஆதிமனிதனுகிய ஆதாமும் ஏவாளும் செய்த 'பாவ'த்தையே அவர்களும் செய்ய வேண்டிய நெருக்கடி ஏற்பட்டு விட்டது. லட்சுமி அன்றிரவு தனனுடைய எட்டாவது குழந்தைக்குத் தாயானாள்.

அதேபோல் அந்தக் குளிர்நிறைந்த இரவில் சென்னை நகரத்துக் குப்பங்களில் எத்தனையோ கண்ணுயிரங்களும் லட்சுமிகளும் ஆயிரக்கணக்கான புதுக்குழந்தைகள் இந்த மண்ணில் மலர அன்று காரணக் கருவிகளானார்கள்.

குழந்தைகள் நல நிபுணராம் உலக மாமேதை டாக்டர் சபேசனின் ஆய்வுரை அவர் பங்களாவின் இரண்டாவது மாடியில் மேசைமேல் அப்படியே கிடந்தது. அவர் அதில் வெளியிட்டிருந்த சிரிய சிந்தனைகளுக்கும் அவர் வீட்டு வேலைக்காரியின் நடைமுறை வாழ்க்கைக்கும் நெடுந்தூர இடைவெளி — அவர் உலகத்தை ஒருமுறை சுற்றி வந்தால் எவ்வளவு தூர இடைவெளியோ அவ்வளவு தூர இடைவெளி அது.

# கனவா - நிஜமா? 3

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்














## Face to Face

# ஒரு மருத்துவர் தனது எல்லைகளை உணர்ந்திருக்க வேண்டும்

(உரையாடலில் பங்கு பெறுவோர்:
டாக்டர் வே. சீதாராமன். B. Sc. M. B. B. S. ஆங்கில மருத்துவத்துறை.
டாக்டர் வி. அனந்த். R.H.M.P. ஹோமியோபதி மருத்துவத்துறை.)

சீதாராமன்: வணக்கம் மிஸ்டர் அனந்த்... இம்மாதிரியான உரையாடல் மக்களுக்குப் பல விதத்திலும் உபயோகமானதாக இருக்கும்னு நான் நம்பறேன்.

அனந்த்: ஐ டு அக்ரீ வித்யூ... நடுவிலே சற்று நலிவுற்றிருந்த ஹோமியோபதி மருத்துவத்துறை தற்போது மக்களிடையே பிராபல்யம் பெற்று வளர்ந்து வருகின்றது. இத்தருணத்தில் இத்துறையைப்பற்றி விளக்கிக்கூற வாய்ப்புக் கிடைத்தது பற்றி உண்மையிலேயே மகிழ்ச்சி அடைகிறேன்...

சீதாராமன்: ஒரு நோயாளி தலைவலியோடு வருகிறான் என்று வைத்துக் கொள்வோம். உங்களுடைய ட்ரீட்மெண்ட்டை எப்படி ஆரம்பிப்பீர்கள்?

அனந்த்: ஹோமியோபதி மருத்துவத்துறையில் எந்த இரு நோயாளிகளையும் ஒரே மாதிரி நாங்கள் பாவிப்பதில்லை. அதனால் ஒவ்வொரு நோயாளியையும் அவனது உடற்கூறு அடிப்படையில் ஆராய்ந்து அவனது உடல் நிலைக்கும், வியாதிக்கும் ஏற்றவாறு மருந்துகள் அளிக்கிறோம். வியாதிகளின் அடிப்படையில் பொதுப்படையாக மருந்துகள் அளிப்பதில்லை.

சீதாராமன்: எங்கள் துறையில் ரத்தப் பரிசோதனை, சிறுநீர் பரிசோதனை, எக்ஸ்ரே, E. E. G., E. C. G. போன்ற பல உடற் பரிசோதனை அம்சங்கள் உள்ளன. ஹோமியோபதி துறையில் இவைகள் கிடையாதே... அப்படியிருக்க நோயின் தன்மையை எப்படிக் கண்டுபிடிப்பீர்கள்?

அனந்த்: நோயாளியின் உடல் சரித்திரம் தான் எங்களது முக்கிய அடிப்படை. நோயாளியிடம் கேள்விமேல் கேள்வி கேட்டு அவன் மூலமாக அவனது உடலின் தன்மை பற்றியும் நோய்க்கான அடிப்படைக் காரணத்தையும் தெரிந்து கொள்வோம். உதாரணத்துக்கு நீங்கள் சொன்னபடி தலைவலி என்று ஒரு நோயாளி வந்தால் உடனே தலைவலிக்கான மருந்து என்று கொடுக்காமல் தலைவலி எந்த இடத்தில் குறிப்பாக இருக்கிறது, தொடர்ந்து வலிக்கிறதா, விட்டுவிட்டு வலிக்கிறதா, எத்தனை நாளாக வலிக்கிறது, போன்று பல வகையான கேள்விகளைக் கேட்டு ஆராய்ந்து நோய்க்கான அடிப்படைக் காரணத்தைக் கண்டு பிடிப்போம். அதன்பிறகு அடிப்படை நோய்க்காக நாங்கள் மருந்து



கொடுப்பதால் தலைவலியும் நீங்கும். அதோடு அடிப்படை நோயும் மறுபடியும் தோன்றுது. ஒரு குறிப்பிட்ட நோயைச் சரியாகக் கண்டுபிடித்து ஹோமியோபதி முறையில் குணப்படுத்திவிட்டால் அந்நோய் மறுபடியும் தோன்றவே தோன்றுது!

சீதாராமன்: தலைவலி சாதாரண ஜல தோஷத்திலும் வரலாம். அல்லது மிகப் பெரிய நோயின் முதல் அறிகுறியாகவும் இருக்கலாம். உதாரணமாக ரத்த அழுத்தம், கண்பார்வையில் கோளாறு, மூளையில் ட்யூமர் போன்ற பெரிய வியாதிகளினாலும் தலைவலி வரலாம். என்னைப் போன்ற பொதுப்படை மருத்துவர்கள் (General Practitioners) நோயாளியைப் பரிசோதித்தும், அவனது வார்த்தைகளின் அடிப்படையிலும் ஒரு குறிப்பிட்ட கட்டம் வரை சிகிச்சை அளிப்போம். எங்களது சிகிச்சைக்கு அடங்காமல் தலைவலி தொடர்ந்து கொண்டிருந்தால் நோயின் தன்மையின் அடிப்படையில் கண் மருத்துவம், நரம்பியல் நிபுணர் போன்றுசிறப்பு மருத்துவ நிபுணர்களின் பார்வைக்கு அந்நோயாளியை அனுப்பி வைப்போம்... உங்கள் துறையில் இந்தச் சௌகர்யம் கிடையாதே...!

அனந்த்: அவசியமில்லையே... நாங்கள்தான் பாடுபட்டு முயன்று முதலிலேயே அடிப்படைக் காரணத்தைக் கண்டுபிடித்து அதற்குத்தானே சிகிச்சை அளிக்கிறோம்.

சீதாராமன்: மூளையில் ட்யூமர் உள்ளதால் தலைவலி வருகிறது என்று வைத்துக் கொண்டால் அதை உங்களால் கண்டுபிடிக்க முடியுமா?

அனந்த்: நிச்சயம் முடியும்... ஆரம்ப காலத்தில் இருக்கும் இத்தகைய மூளைக் கட்டிகளைக் குணமாக்க ஹோமியோபதி முறையில் மருந்துகள் உள்ளன. குணப்படுத்தியும் இருக்கிறோம்!

சீதாராமன்: நோயின் அறிகுறிகளைக்கொண்டு (Symptomatic) நோயின் தன்மையைப் பலவித பரிசோதனைகளின் மூலம் நிர்ணயித்துப் பின்னர் குணப்படுத்துதல் (Curative) என்று எங்கள் துறையில் இருப்பதுபோல் உங்கள் துறையில் உண்டா?

**தபேலா விற்பன்னர் :**

பட்டோடி நவாப்புக்கு வேட்டை என்றால் ரொம்பப் பிரியம். பட்டோடி நவாப்புக்கு இந்திய சங்கீதத்தில் ஈடுபாடு அதிகம். தபேலா வாசிப்பதிலும் விற்பன்னர். ஷர்மிளா தாகூரை மணந்த பட்டோடி நவாப்புக்கும் புலி' (Tiger) என்ற பட்டம் உண்டு. இந்தப் பட்டம் அவர் பிறந்த போதே வழங்கப்பட்டதாம். கிரிக்கெட் திறமைக்குக் கிடைத்த பட்டம் அல்ல, புலி!



அனந்த்: ஹோமியோபதியில் Symptomatic, curative ஆகிய இரண்டையும் ஆரம்பத்திலேயே இணைத்துத்தானே சிகிச்சை அளிக்கிறோம்!

சீதாராமன்: அறுவைச்சிகிச்சைமுறை உங்கள் துறையில் கிடையாதே!

அனந்த்: உரிய காலத்தில் நோயாளி எங்களிடம் வந்தால் அறுவை சிகிச்சை இன்றியே பெரும்பாலான நோய்களை எங்களால் குணப்படுத்த முடியும். மூல நோய் (Piles ), ஹெர்னியா, சிறுநீர் கட்டிகள் (Stones) போன்ற நோய்களைக்கூட ஒரு குறிப்பிட்ட 'ஸ்டேஜ்வரை' மருந்துகள் மூலமாகவே குணப்படுத்துகிறோம்.

சீதாராமன்: தீவிர நிலையில் அறுவை சிகிச்சை செய்துதான் சரிப்படுத்தக்கூடிய நிலையில் நோயாளி வந்தால் என்ன செய்வீர்கள்?

அனந்த்: சிறிதும் தயங்காமல் ஆஸ்பத்திரிக்கோ, அல்லது தனிப்பட்ட ஆங்கில மருத்துவமுறை அறுவை சிகிச்சை நிபுணரிடமோ அனுப்பி வைப்போம்.

சீதாராமன்: எங்கள் துறையில் மருந்துகளை வாய் வழியாகவும் இன்செக்ஷன்கள் மூலமும் நோயாளியின் உடலில் செலுத்துவது போன்று உங்கள் துறையில் உள்ளதா?

அனந்த்: எங்கள் துறையில் இன்செக்ஷன்கள் கிடையாது. நோயாளிகள் வாய் வழியாகத்தான் மருந்துகளை உட்கொள்ள வேண்டும். ஆனால் எங்கள் துறையின் தனிப்பட்ட விசேஷம் என்னவென்றால் நாங்கள் தரும் மருந்தை உட்கொண்டு அது தொண்டையை அடைந்த உடனே வேலை செய்ய ஆரம்பித்து விடுகிறது. உடலின் ஜீரண உறுப்புக்கள் மூலம் ரத்தத்தை அடைய வேண்டும் என்பதில்லை.

சீதாராமன்: எண்ணெய் தேய்த்துக் கொள்வதால் எந்தவித அதிகப்படி பலனும் உடலுக்கு ஏற்படுவதில்லை. மாறாகச் சிலருக்கு அலர்ஜி தோற்றுவிக்கக்கூட அது காரணமாகிறது என்று நாங்கள் நம்புகிறோம். உங்கள் நிலை எப்படி?

அனந்த்: ஒவ்வொருவரின் உடல் நிலையையும் உஷ்ண உடம்பு, சீதள உடம்பு என்று நாங்கள் பாகுபடுத்தி ஒவ்வொருவரின் உடல்நிலைக்கு ஏற்றவாறு மருந்துகள் அளிக்கிறோம். எண்ணெய் தேய்த்துக் குளிப்பதால் உஷ்ண உடம்புக்காரர்கள் தங்கள் உடல்நிலையைக் குளிர்வித்துக் கொள்ள முடியும் என்று எங்கள் மருத்துவத்துறை நம்புகிறது... அது உண்மையுங் கூட... சீதள உடல்நிலையை உஷ்ணப்படுத்துவதும்... உஷ்ண உடல்நிலையைக் குளிர்விப்பதும் எங்கள் மருத்துவ முறையின் சிகிச்சையில் அடங்கும்...

சீதாராமன்: சீதளம்... உஷ்ணம் ஆகியவற்றில் எங்களுக்கு நம்பிக்கை கிடையாது... அது சரி, ஹோமியோபதி மருத்துவமுறையில் மருந்துகளை அடிக்கடி ... அதாவது அரைமணிக்கு ஒருதடவைகூட உட்கொள்ளும்படி இருக்கும் என்று சொல்லப்படுகிறது. இது உண்மையா?

அனந்த்: ஒருசில வியாதிகளுக்கு இம்மாதிரி சாப்பிடும் அவசியம் உண்டு.

(உரையாடல் அடுத்த இதழில் முடியும்.)




செய்யாமல் செய்த உதவிக்கு, வையகமும்
வானகமும் ஆற்றல் அரிது.
— செய்ந்நன்றி அறிதல்-திருக்குறள்
வான் பொய்த்தால் வையகமும் வாழாது. ஆதலால்
மழை கண்டு நாட்டில் வளம் கண்ட உழவர் பெரு
மக்கள் நன்றி கூறும் திருநாள் இப்பொங்கல் திருநாள்.
நன்றி சொல்லும் உழவர் பெருமக்களுக்கு
ஸ்பிக் கூறும்
இனிய பொங்கல்
வாழ்த்துக்கள்
ஸ்பிக் உரங்கள் அளிப்பது வளமை, செழுமை. ஸ்பிக் உரங்கள்
நாட்டின் மிகப் பெரிய உரத் தொழிற்சாலையில் தயாராகின்றன.


SPIC
சதர்ன் பெட்ரோ கெமிக்கல்
இண்டஸ்ட்ரீஸ்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
ஸ்பிக் சென்டர்,
97, மவுண்ட் ரோடு,
சென்னை-32.
ADWAVE SPIC 973

# தனி அறை

மி.வி.ஆர்

வீரம்மாவின் தூக்கம் கடந்த மூன்று தைகளில் சிதைந்து போயிருந்தது. முதல் சில மாதங்கள் தூங்காமலே இரவெல்லாம் புலம்பி, மனம் நொந்து, கண் கலங்கிக் கடைசியில் கோவை ஆஸ்பத்திரியில் ஒருமாதம் படுத்தவள், திரும்பிச் சங்கரிதுர்க்கம் வந்த பிறகும் நெஞ்சில் ஏற்பட்ட வலியில் துவண்டுபோய், இரவின் இருளில் கண்ணைத் திறந்து கிடந்தாள். நாள் செல்லச் செல்ல, நெஞ்சின் வலி குறையவில்லை என்றாலும் உடலின் அசதியின் தாக்கலால் கண்கள் அவ்வப்போது தாமாக மூடிக்கொண்டு, வலியைப் போர்வையால் போர்த்துவது போலப் போர்த்திவிடும். ஆனால் இந்தப் போர்வைகளும் ஓரிரு மணி நேரங்களுக்குத்தான். கண் திறந்தால் நெஞ்சில் குத்திய அம்பின் வேதனை. மார்பை அழுத்திய சுமை. அவளுடைய வசந்தத்தைப் பறித்த கை, கழுத்தை நெரிக்க வருவது போன்ற பிரமை.

இது அவளுடைய வெள்ளி விழாப் பொங்கல். வெள்ளிவிழா என்றால் கொண்டாடித்தான் ஆக வேண்டுமா? நான்காவது பொங்கலைக் கொண்டாட அம்மா விடவில்லை. அதன் பிறகு அப்பாவின் தூரத்து உறவுக்காரி ஒருத்தி அவளைக் கவனித்துக் கொள்ள, அப்பா இரவு நேரங்களைச் சேலத்திலும் ஈரோட்டிலுமாகக் கழித்தார். கோட்டை போன்ற மூன்றுமாடிக் கருங்கல் வீடு. ஒரு மைல் தூரத்துக்கு வீடு ஏதும் இல்லை. முன்னால் சிறு குன்றுகள். பின்னால் ஈரமற்றவனின் நெஞ்சு போன்ற நிலம். அப்பா தம் லீலைகளை நடத்தச் சேலம் ஈரோடு என்று ஓடியிருக்க வேண்டாம். வீரம்மாவைப் பங்களாவின் கீழ்ப்பகுதியில் உறவுக்காரரின் பாதுகாப்பில் வைத்துவிட்டு, மூன்றாவது மாடியில் அவருடைய தினசரி விழாக்களைக் கொண்டாடியிருக்கலாம். ஆனால் அவர் அப்படிச் செய்யவில்லை.

அவளுடைய தாத்தா — அப்பாவின் அப்பா —வெள்ளைக்காரன் காலத்தில் ரயில்வே காண்ட்ராக்ட் எடுத்துக் கற்களைப் பணமாகப் பண்ணியவர். மூன்றுமாடி வீட்டைக் கிராமத்திலேயே கட்டினார். ரயில் தண்டவாளங்களுக்கு அவர் பரப்பிய கற்கள் பணமாகிப் பங்களா உருவில் வந்தபோது ஒரு சாம்ராஜ்யத்தையே உருவாக்கிய பெருமிதம் அவருக்கு ஏற்பட்டது.

முடிவு வீரம்மா இப்போது இருக்கும் கருங்கல் கட்டிடம்.

தாத்தா போய், அப்பா தலையெடுத்து அவரும் ரயில்வே காண்ட்ராக்ட்டுகளில் ஈடுபட்டு மேலும் சம்பாதித்து 'குளிர்' அறை 'குளிர்ப்' பெட்டி என்று குளிர் குளிராக வாழ்ந்து விட்டு ஒருநாள் ஒரு தீவிபத்தில் கருகிப் போனார். ஆனால் அவர் அப்படி, நான்கு தைகளுக்கு முன் கரியாகப் போவதற்கு முன் ஒரு சிறிய தவற்றைச் செய்தார். அதுதான் வீரம்மாவின் கலியாணம்.

நல்லசாமி பார்ப்பதற்கு 'நல்ல' சாமியாகவே இருந்தான். நல்ல உடற்கட்டும், முகத்தில் மீசையும் இருந்தபோதிலும் கண்கள் அவனுடைய சாதுத்தனத்தைப் பிரதிபலித்தன. வீரம்மாவின் தந்தையிடம், தப்பு செய்த நல்ல மாணவன் தலைமை ஆசிரியர் முன் நிற்பதுபோல நடந்து கொண்டான்.

இயற்கை தூண்டி விடுகிற, விடக்கூடிய ஆசைகள் வீரம்மாவை விட்டுவிடவில்லை. செழிப்பான உடற்கட்டு. தனிமையைத் தவிர வேறு எதையும் அறியாத வாழ்க்கை. தன்மேல் அன்பைப் பொழியவும், பகலுக்குக் குடையாகவும், இரவுக்குத் துணையாகவும் இருக்க அவளுடைய கழித்தோடும் இரத்தத்தின் பெண்மை, இயற்கையின் விசித்திரப்படி

ஃபிரட் பிரைஸ் ஏழு காட்சுகளைப் பிடித்தார். ஒரு பெண்மணி பிரைஸிடம் வந்து. "நீங்கள் காட்ச் பிடித்த அழகு என்னை அப்படியே அந்தரத்தில் மிதக்க வைத்து விட்டது. பால்கனியிலிருந்து கீழே குதிக்க வேண்டும் என்றுகூடத் தோன்றியது" என்றாள். அதற்கு பிரைஸ் "நான் இன்று இருந்த ஜோரில் உங்களைக் கூடக் காட்ச் பிடித்திருப்பேன்" என்றார்.

ருக்மிணி ராமச்சந்திரன்.



ஆண்மையை நாடியது. மனத்தின் தராசுத் தட்டுக்களில் தன்னையும் நல்லசாமியையும் வைத்து எடை போட்டுப் பார்த்தாள்.

அம்மா அப்பா இல்லாத நல்லசாமியும் சாதுவாகக் காணப்பட்டான். யாரையுமே எளிதில் நம்பாத அப்பாவே நல்லசாமியை நல்லவன் என்று கூறி, சர்ட்டிபிகேட்டும் வழங்கி விட்டார். இனிமேல் என்ன?

மூன்று மாடி பங்களாவில் கலியாணம் விமரிசையாக நடந்தது

பெண்ணின் கலியாணம் இவ்வளவு ஆரவாரமாக நடந்த சந்தோஷ மயக்கத்தில், தந்தை சேலம், ஈரோடு என்று மாறி மாறி ஓடி விளையாடினார்.

நான்கு தைகளுக்கு முன் ஒருநாள் அதிகாலை வேளையில் வீரம்மாவின் தந்தை ஈரோட்டிலிருந்து வேகமாகக் காரை ஓட்டிக் கொண்டு திரும்பினார். வீட்டிலிருந்து புறப்பட்டுச் செல்ல அவர் அவசரப் பட்டால் அதில் நியாயம் இருக்கும், அர்த்தம் இருக்கும். வீடு திரும்ப அப்படி என்ன அவசரம்? ஆனால் விதி அவசரப்பட்டது.

தூங்கிக் கொண்டிருக்கும் வண்டிக்காரனை எழுப்ப மனமில்லாமல், மௌனமாக ஊர்ந்து கொண்டிருக்கும் இரு காளைகள், ஒரு பெரிய செல்வந்தர் பின்னால் காரில் வேகமாக வந்து கொண்டிருக்கிறார் என்பதை உணரவில்லை. தம் இயல்பில் அவை ஊர்ந்து கொண்டிருந்தன.

வீரம்மாவின் தந்தை 'கடைசி' நிமிஷத்தில்தான் அந்தப் பார வண்டியைப் பார்த்தார். ஸ்டியரிங்கையும் ஒடித்து, அதேசமயத்தில் பிரேக்கைப் போடக் காலையும் அழுத்தி வைத்தார்.

காலின் ஆணையைக் கார் கேட்க மறுத்தது. ஆனால் ஸ்டியரிங்கின் ஆசையை நிறைவேற்றியது. கார் வேகமாகத் திரும்பி, சாலையின் பள்ளத்தில் சென்று மேட்டில் ஏறி, பாறை மேல் மோதியது. அதிகாலை நேரத்தில் ஒரு பெரும் ஜோதி மூண்டது. மூண்ட ஜோதியில் வீரம்மாவின் தந்தை கலந்து, கரைந்து, மறைந்து போனார்.

வீரம்மா நான்கு நாட்கள் அழுதாள் என்றால் அவளுடைய கணவன் நல்லசாமி நாற்பது நாட்கள் அழுதான்.

நல்லசாமிக்குப் புதிதாக ரயில்வே கண்ட்ராக்டுகள் கிடைக்கவில்லை. இதைப்பற்றி அவன் கவலைப்படவில்லை என்றால், வீரம்மா பெரும் மகிழ்ச்சியே அடைந்தாள். அவ்வளவு பெரிய வீட்டில் அவர்கள் இருவர்தான் இருந்தார்கள். தொழில் சம்பந்தமாக அவனும் வெளியேறி விட்டால், பிடுங்கித் தின்னும் தனிமையை வீரம்மா எப்படிச் சகித்துக் கொள்வாள்?

திடீரென்று நல்லசாமி செய்திகள் கொண்டு வந்தான்.

மருடஞ்சாவடியில் ஒரு பணக்காரக் கவுண்டர் வீட்டில் கொள்ளை. லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள தங்க நகைகளும் வெள்ளிப் பாத்திரங்களும் கொள்ளை அடிக்கப் பட்டனவாம். தண்ணீர்ப் பந்தல் பாளையத்தில் ஒரு வீட்டில் கொள்ளை. இருபதாயிரம் ரூபாயை, துப்பாக்கி முனையில் பறித்தார்களாம். வேம்படித்தாளம் கிராமத்தில் முக்கால் லட்சம் களவு.

''ஏன் இதையெல்லாம் பேப்பரிலே போடலே?'' என்று கேட்டாள் வீரம்மா.

''போட்டா ஜனங்க பயப்படுவாங்க ளேன்னுதான்'' என்றான் நல்லசாமி.

''நம்ம வீட்டிலே, ஏராளமா நகையும் வெள்ளிப் பாத்திரமும் இருக்கு...ஏன், அப்பாவோட பணமும் இரும்புப் பெட்டியிலே இருக்கு'' என்றாள் வீரம்மா,

''நாம ஜாக்கிரதையா இருக்கணும்...''

''என்ன செய்யலாம்?''



''சேலமோ ஈரோடோ போய், பாங்கிலே, ஸேஃப்டி லாக்கர்லே வைச்சுப்புடுவோம். நீயும் வா.''

''நான் எதுக்கு?''

''பணமும் நகையும் உன்னுடையது தானே?''

''பிரிச்சுப் பேசறீங்களா?''

''என் பேர்லே எதுக்கு இருக்கணும்?'' என்றான் நல்லசாமி.

''பணத்தைப் பாங்கிலே கட்டி, நகைப் பாத்திரங்களை லாக்கர்லே வைக்கலாம்னு சொல்றீங்களா?''

''இங்கே வீட்லே இருக்கிற பணம் கணக்கிலே வராதது... அதனாலே, அதையும் லாக்கர்லேதான் வைக்கணும்...''

''ஜாயிண்ட்டா வைச்சுட்டா எப்படி?'' என்றாள் வீரம்மா.

''நம்ம ரெண்டு பேர்லே யார் வேணும்னாலும் ரூபாய் எடுத்துக்கலாம், பார்த்துக்கலாம். ஆனா அதுக்கு ரெண்டு பேரும் எழுதிக் கொடுக்கணும்.''

''அப்படியே செய்வோம். ஆனா கணக்கிலே வராத பணம் வீட்டிலேயே இருக்கட்டும்'' என்றாள் வீரம்மா.

''உன் இஷ்டம்.''

''என் இஷ்டத்துக்கு இல்லே. கணக்கிலே வராத பணத்தைக் கணக்கிலே கொண்டு வந்து, கட்ட வேண்டிய வரி பாக்கியைக் கட்டிடலாம். நாம ஏன் சர்க்காரை ஏமாத்தணும்? கணக்கிலே வந்த பணமே நிறைய இருக்கே!''

''சரி'' என்றான் நல்லசாமி.

மூன்று தைகளுக்கு முன்னால் வந்த ஒரு மார்கழி.

''ஒரு நல்ல நியூஸ்!'' என்று பதற்றமில்லாமல் சொல்லிக் கொண்டே வந்தான் நல்லசாமி.

''சொல்லுங்க.''

''புதுசாக் காண்ட்ராக்ட் வர வாய்ப்பு இருக்கு.''

''சந்தோஷம்... ஆனா அப்புறம் நீங்க இப்ப இருக்கற மாதிரி வீட்டிலே இருக்க மாட்டீங்க!''

''உன் புருஷன் உழைச்சுச் சம்பாதிக்கறதிலே உனக்குப் பெருமை இல்லையா!''

''அப்படிச் சொன்னேனா?''

''நான் இப்ப முதல்லே மெட்ராஸ் போறேன்... அப்புறம் டில்லி போறேன்... ரயில்லே போர்டு அங்கேதானே இருக்கு!''

''நான் டில்லி பார்த்தது இல்லீங்க!''

''இப்ப என்கூட வந்தா, நீ ஓட்டல் ரூம்லே இருப்பே... நான் தொழில் வேலையா அலைஞ்சுண்டிருப்பேன்... காண்ட்ராக்ட் கிடைக்கட்டும். உடனே ரெண்டு பேரும் பெரிய டூராப் போவோம்.''

''சரிங்க.''

''வீரம்மா.''

''என்னங்க?''

''கொஞ்சம் பணம் வேணும்.''

''ஏன் என்கிட்டே கேட்கறீங்க?''

''உன் பணம்தானே!''

''இப்படிப் பிரிச்சுப் பிரிச்சுப் பேசி ஏன் என்னை வதைக்கறீங்க... பெட்டியைத் திறந்து எவ்வளவு வேணுமோ அவ்வளவு எடுத்துக்குங்க?''

அந்த டிசம்பர் மாதம் பதினெட்டாம் தேதி அவன் புறப்பட்டான். சென்னையில் மூன்று நாட்கள் இருந்து விட்டு, டில்லிக்குச் செல்லப் போவதாகக் கூறினான். எப்போது திரும்புவான் என்று அவனுக்கே தெரியாதாம்.

ஜனவரி பிறந்தது.

நல்லசாமியைக் காணோம். சென்னையிலிருந்தும் கடிதம் இல்லை. டில்லியிலிருந்தும் கடிதம் இல்லை.

ஜனவரி ஐந்தாம் தேதி அவள் இரும்புப் பெட்டியைத் திறந்தாள். கணக்கில் வராத லட்சம் ரூபாய் அதில்தான் இருந்தது. அவள் பார்த்தபோது அதைக் காணவில்லை.

''எவ்வளவு பணம் வேணுமோ அவ்வளவு எடுத்துக்குங்க.''

அவன் அவ்வளவையும் எடுத்திருக்கிறான்.

அவள் பெட்டியைக் குடைந்தாள். பாங்க் லாக்கர் சாவியை அவள் ஒரு சிறு அட்டைப் பெட்டியில் வைத்திருந்தாள். அட்டைப் பெட்டி இருந்தது. திறந்தபோது காற்றைத் தான் உணர்ந்தாள்.

முதன் முறையாகச் சந்தேகம் அவளுடைய மனத்தில் ஒரு முள்ளாகக் குத்தியது.

அன்றே சேலம் போனாள்.

அவளுடைய லாக்கரில் வேறு யாரோ தங்களுடைய பொருள்களை வைத்திருந்தார்கள்.

லட்சம் ரூபாய் ரொக்கம்.

**ஆள் குள்ளம் கீர்த்தி பெரிது:**

48-49ல் இங்கு வந்த மேற்கிந்தியத் தீவுக்குழுவில் இரு டபிள்யூக்களில் வால்காட் வாட்டசாட்டமான உயரமான ஆள். ஆனால் வீக்ஸோ குள்ளமானவர். இரண்டு பேர் 'ஷாட்'களும் எங்களைப் பிடித்துக் கொண்டு போகும். வீக்ஸ் ஐந்து டெஸ்ட்களிலும் 779 ரன்கள் எடுத்தார். முதல் மூன்று டெஸ்ட்களில் நான்கு சதங்கள் எடுத்தது ஒரு பெரிய ரிகார்டு. 1953ல் இந்தியா மேற்கிந்தியத் தீவுக்கு விஜயம் செய்தபோது வீக்ஸ் மூன்று சதங்களும் 716 ரன்களும் எடுத்தது அரிய சாதனை.



## திலீப் தேசாய் பிரார்த்தனை

திலீப் தேசாய் தம் கழுத்தில் ஒரு மந்திரிக்கப்பட்ட சரடை அணிந்து கொண்டிருப்பார். அவர் மைதானத்தின் 'பாட்' செய்யச் செல்வதற்கு முன்னால் அந்தச் சரட்டைத் தொட்டுக் கொண்டு இப்படிப் பிரார்த்தனை செய்வார்: ''கடவுளே! என்னைப் பதினைந்து நிமிஷங்கள் தங்கியிருக்க அருள் புரிந்தால் போதும். பிறகு நான் ஜாக்கிரதையாக ஆடத் தொடங்கி விடுவேன்!''

ஐம்பதாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள நகைகள், பாத்திரங்கள்! அவை எங்கே? எங்கே நல்லசாமி இருக்கிறானோ, அங்கே!

கணக்கில் வந்த பணம் பத்திரமாக இருந்தது. எழுபத்தெட்டாயிரத்து சொச்சம்.

அன்று ஏற்பட்ட நெஞ்சுவலி இன்னும் நிற்கவில்லை.

நல்லசாமி வருவானா?

அவன் ஏன் இப்படிச் செய்ய வேண்டும்?

அவள் தகப்பனார் அவனை நல்லவன் என்று நம்பினாரே?

அவள் அவனைச் சாது என்று நம்பி, தன்னையே அவனுக்கு அளித்து அவனுடைய நிழலில் தங்கினாளே? அவன் ஏன் இப்படிச் செய்திருக்க வேண்டும்?

கேள்விகள் தூக்கத்தைச் சிதைத்தன. அவ்வளவு பெரிய வீட்டில் கிடைத்த ஒரே துணையும் அவளுக்குப் போனபின், அவள் ஒரு நடைப் பிணமானாள்.

ஆனால் ஒரு நம்பிக்கை அறுபடாமல் ஊசலாடிக் கொண்டேயிருந்தது.

ஒருநாள் மனம் வருந்தி, திருந்தி அவன் வருவான். அவள் காலில் விழாத தோஷமாக மன்னிப்புக் கேட்பான்.

ஏதோ ஒரு பெரிய நிகழ்ச்சி நடக்க இருக்கிறது என்று அவளுடைய உள்ளுணர்வு அவளை அன்று இரவு திடுரென்று தட்டி எழுப்பியது. அவள் கிலேசத்துடன் படுக்கையில் உட்கார்ந்து தலைமாட்டு ஸ்விட்சைப் போட்டாள். இரண்டு பத்து. ஏதோ ஒரு ரயில் ஊளையிட்டுக் கொண்டே விரைவது காதில் விழுந்தது.

அறையை விட்டு வெளியே வந்தாள். கூடத்திலிருந்து ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்தாள். முப்பது ஆண்டுகளாக வீட்டைக் காவல் காக்கும் செங்கோடன், டிராக்டர் டிரைவர் சின்னப்பனுடன் பேசிக் கொண்டிருந்தான்.

போர்ட்டிகோவில் ஓர் ஆள் உட்கார்ந்திருப்பதையும் கண்டாள். இருட்டில் உருவம் தான் தெரிந்தது. பக்கத்தில் ஒரு பெட்டி இருப்பதும் தெரிந்தது.

அவள் விளக்கை ஏற்றினாள். கதவைத் திறந்தாள்.

செங்கோடன் ஓடோடி வந்தான்.

''அம்மா!'' அதற்குமேல் நா ஒலியைக் கிளப்பவில்லை.

இப்போது வெளிச்சத்தில் அவனை அவள் பார்த்தாள். அவளுடைய நம்பிக்கை வீண் போகவில்லை.

நல்லசாமி தயங்கித் தயங்கி முன்னேறி வந்தான்.

''ஐயா அப்பவே வந்துட்டாரு அம்மா... ஆனா உங்க தூக்கத்தைக் கெடுக்கக் கூடாதுன்னு கண்டிப்பாச் சொல்லிட்டாரு... பாவம், குளிர்லேயே உட்கார்ந்திருந்தாரு!''

வீரம்மா பதில் சொல்லவில்லை.

''என்னை மன்னிச்சுடு வீரம்மா!'' என்ற நல்லசாமி ''இனி நான் வாழறதும் அழியறதும் உன் கையிலேதான் இருக்கு!'' என்றான்.

செங்கோடன் திண்ணைக்குத் திரும்ப, அவள் கேட்டாள்: ''என் கையில் என்றால்?'' என்று.

''ஒரு மோசடி வழக்கில் மாட்டிட்டேன்... கான்பூர் போலீஸ் பெரிய வலையா விரிச்சிருக்காங்க! காலையிலே எல்லாம் விவரமாச் சொல்றேன்.''

வீரம்மா செங்கோடனை அழைத்தாள்.

''ஐயாவுக்கு மூணாம் மாடியிலே அந்த மூலை ரூமைத் தயார் பண்ணு.''

''பொட்டல் காட்டைப் பார்க்கிற ஒரே ஜன்னல்தாம்மா அதிலே இருக்கு... காத்து கூட வராது... ஃபேன் கூட இல்லை. உங்க தாத்தா அதிலே காட்டிலே பிடிச்ச சிறுத்தையை அடைச்சு வச்சிருந்தாரு!''

''அந்த ரூம்தான் இப்ப இவருக்குச் சரியான இடம். சீக்கிரம் பெருக்கி வை!''

பத்து நாட்களுக்குப் பிறகு ஒருநாள் நல்லசாமி, செங்கோடன் மூலமாக அவளைக் கூப்பிட்டான்.

''இந்த ரூமிலே என்னை எத்தனை நாட்கள் அடைக்கப் போறே, வீரம்மா... பாய் இல்லை. தலையணை இல்லை. உலகில் என்ன நடக்கிறது என்று தெரிந்து கொள்ளப் பத்திரிகை இல்லை. பொழுது போகப் புத்தகம் இல்லை. நீ கொடுக்கிற கேழ்வரகுக் கூழும் நீர் மோரும் என்னைக் கொல்றது!''

வீரம்மா சிரித்தாள்.

''ஜெயில்லே கூட சில வசதிகள் இருக்கும்!'' என்றான் அவன்.

''இப்ப நீங்க ஒரு லாக்கர்லே இருக்கீங்க... ஸேஃப்டி லாக்கர். சாவி எங்கிட்டே இருக்கு.. ஜாயிண்ட் அக்கௌண்ட் இல்லை! தனி அக்கௌண்ட்...''

''வீரம்மா!''

''ஹங்... இன்னொரு விஷயம். செங்கோடனுடைய புள்ளை ஃபாரஸ்ட் டிபார்ட்மெண்டிலே இருக்கான்... சிறுத்தைக் குட்டி கிடைச்சிருக்காம்... பத்துநாள் குட்டி... என் தாத்தா சிறுத்தையை இந்த ரூம்லேதான் அடைச்சிருந்தார்...''

''அப்படியாவது எனக்கு விடுதலை கிடைக்கட்டும்... நாளைக்கே அதை இங்கே விட்டுட்டு என்னை வெளியேத்திடு... நான் ஊரை விட்டே ஓடிடறேன்...''

''பாவம், பத்துநாள் குட்டி. அதுக்கு நல்ல துணை வேண்டும்! இந்த ரூம் சிறுத்தைக்கு நல்ல ராசியான ரூம்! நீங்க அதோட தினம் தினம் பேசிட்டிருக்கலாம்!''

''வீரம்மா!''

வீரம்மா போய்க் கொண்டேயிருந்தாள்.



## ஜஸ்டிஸ் கோபிநாத்

ஓய்வுபெறும் உயர் அதிகாரியின் ஆசாபாசங்களை அழகுறச் சித்தரித்தது வியட்நாம் வீடு.

ஒரு பிரபல வழக்கறிஞராக வந்து கௌரவத்துக்காகவே வாழ்ந்து காட்டிய கம்பீரம். உயர் ராணுவ அதிகாரியாக வந்து கர்ஜனை புரிந்த ஜெனரல் சக்கரவர்த்தி.

'டெக்னிகலா'க ஒரு பைலட்டின் பாத்திரத்தை உருவாக்கா விட்டாலும் மனத்தில் நிற்கும்படியாக இருந்த பிரேம்நாத். இந்த வரிசையில் ஜஸ்டிஸ் கோபிநாத்துக்கும் ஒரு இடம் இருக்கும் என்று எதிர்பார்த்தோம். ஆனால் பெருத்த ஏமாற்றம். நடிகர் திலகம் இந்தப்படத்தில் ரிடையராகிப்போன நீதிபதி போல (நடிப்பில்) ஓய்வெடுத்துக் கொண்டிருக்கிறார். பாமரமக்களும் படித்தவர்களும் 'சிவாஜி' படம் என்றால் நடிப்பின் புதிய பரிணாமங்களை எதிர்பார்ப்பது வழக்கம். அந்த எதிர்பார்ப்பைக் கோபிநாத் பூர்த்தி செய்யவில்லை.

கே. ஆர். விஜயாவுக்கு 'ஊதித்' தள்ளி விட்டுப் போகும் பாத்திரம். அதேமாதிரி அனாயாசமாகச் செய்துள்ளார்.

கோபிநாத்தின் வளர்ப்பு மகனாக ரஜனிகாந்த் வருகிறார். வழக்கத்துக்கு விரோதமாக அடக்கமாக நடித்து வந்தவருக்கு 'அவருடைய வழக்கமான' நடிப்புக்கு சான்ஸ் தரவேண்டுமென்று சண்டையைக் கடைசியில் புகுத்தியிருக்கிறார்கள். தந்தை கோபிநாத்திடம் 'ஜூடோ' பயிற்சி பெற்று வளர்ந்த மகன் ரஜனி நன்றாகவே சண்டை போடுகிறார்!

கலப்புமணம் சமாசாரம் ஊசிப்போன விஷயம். குறிப்பிட்ட ஒரு சமூகத்தைக் குத்துவதே தமிழ்ப்படத் துறைக்குப் பிழைப்பாகப் போய்விட்டது. வியட்நாம் வீட்டாரைக் காண முடியவில்லை!

— கௌசிகன்

## அக்கினிப் பிரவேசம்

அக்காவின் திருமணத்துக்குப் பதினைந்து பவுன் சங்கிலிக்காகத் திருப்பதியில் பிரார்த்தனை செய்யச் சென்ற சாந்திக்கு, அவள் காலடியில் ஒரு சங்கிலி தட்டுப்படுகிறது! 'இறைவன் கொடுத்த வரம்' என்று கருதிய அந்தத் தங்கச் சங்கிலி அவளுக்குப் பல சோதனைகளைத் தருகிறது! கடைசியில் வில்லனிடமிருந்து சங்கிலியைப் பறித்துத் திருப்பதியில் இறைவன் காணிக்கையாக்கிச் சாந்தி கதாநாயகனுடன் அக்கினிப் பிரவேசம் செய்து திரும்புகிறாள்! பதினைந்து பவுன் தங்கச்சங்கிலி உண்டாக்கும் சங்கடங்களே இந்தப் படத்தின் உட்கரு!

பத்மப்பிரியா சாந்தியாகப் பட்டதாரி ஆவதற்கு முன், வில்லனின் முகத்தைப் பதம் பார்க்கிறாள். அக்காவின் கல்யாணத்தை நடத்தி மகிழும் சாந்தி அதனால் திருட்டுப் பட்டமும்பெற்று அவஸ்தைப் படுகிறாள்! சக்கரநாற்காலி மானேஜிங் டைரக்டர் (அசோகன்), மனைவியை இழந்து பரிதவிக்கும் கதாநாயகன் (ஸ்ரீகாந்த்), அன்னையை இழந்து தவிக்கும் சிறுமி (பேபி வந்தனா) இவர்களுக்குள்ள பாசப் பிணைப்பினால் மறுபடியும் சாந்தி கிடைக்கிறாள், அக்கினிப் பிரவேசத்துக்குப் பிறகு!

அப்பச்சி — ஆச்சி சிட்டாட்டக் கும்பல் கலாட்டாவில் மனோரமா — வி. கே. ராமசாமி குழு தருவது சிரிப்பல்ல, வேதனை! விஜய சந்தர் எழுதிய கதைக்கு வசனம் பாடல்கள் அமைத்திருப்பவர் புலவர் புலமைப்பித்தன். கதைக்குப் பொருத்தமில்லாத தலைப்புடைய இந்தப் படத்தில் 'அக்னிப்பிரவேசம் மனமெனும் ஆலயப் பிரவேசம்' என்ற பாட்டு மட்டும் நன்கு ஒலிக்கிறது!

— பி. எஸ். எம்.







பிச்சமுத்து
ஆடுதுறை (தஞ்சை மாவட்டம்) யைச் சேர்ந்தவர்.
இந்த ஆண்டு அபரிமிதமான அறுவடையைப் பெற்றார்.
...உறுதியான ஆம்கோ ட்ராக்டர் பாட்டரிக்கு நன்றி



உங்களுடைய ட்ராக்டர் நீடித்து உறுதியாக உழைப்பதற்கேற்ற அதிகப்படியான வலுவைக் கொண்டுள்ளது ஆம்கோ ட்ராக்டர் பாட்டரி.
நினைவிருக்கட்டும் ஆம்கோ ட்ராக்டர் பாட்டரி உங்கள் கரடுமுரடான வயல்களில் நீடித்துழைப்பதற்கென்றே விசேஷமாக உருவாக்கப்பட்டுள்ளது.
ஆம்கோ பாட்டரீஸ் லிட்.,



AMCO
AM-MAC (B)-4-78 TAM

# ராஜகர்ஜனை

கோவி. மணிசேகரன்

## 19. ராஜ நாகம்

"ரங்கநாயகி! இது ராஜநாகம்!''

''புரிகிறது குமாரகல்தான்! அதனால்தான் இதனை மரியாதை கொடுத்து வழிகாட்ட வேண்டுகிறேன்!''

''மரியாதை...?''

''ம்ம்...! ஒரு ராஜகர்ஜனை ஒரு ராஜ சிற்றத்துக்குக் கொடுக்கிற கௌரவமான மரியாதை!''

''இது கொடிய விஷம் நிறைந்த ஜந்து!''

''இதனினும் நம்மில் கொடிய விஷமுடைய ஜடங்கள் இருக்கின்றன!''

''நீ ஒரு இந்துப்பெண்! அதனால் இந்தப் பாதகம் நிறைந்த பாம்புக்குப் பரிந்துரைக்கிறாய்!''

''நீங்களா இவ்விதம் பேசுகிறீர்கள்? மதங்களையெல்லாம் கடந்த ஒரு மானுஷ்ய சிம்ஹத்தைக் காதலிக்கிறேன் என்று மதம் கொண்டேனே... நீங்களா இப்படிப் பேசுகிறீர்கள்? நான் ஒரு வருங்கால இஸ்லாமிய ராணி! ஆனால் இந்து மதத்தின் பிரதிநிதி! இருதரப்புச் சாங்கியங்களுக்கும் சமத்துவ மளித்துப் பரிசீலிக்கிற எனது குமார கல்தானும் ஒருராஜ நாகம்தானே? நல்லவர்களுக்கு ராஜன், பொல்லாதவர்களுக்கு நாகம்!''

'ஓகோ'வென்று இடிமுழக்கம் போலக் கர்ஜனை நகைபுரிகிறான் திப்புசுல்தான்...

எத்தனை சமநோக்கோடு சம்பாஷிக்கிறாள் இந்த நாயகே வதை...

'அவன் அவளது நெற்றியைப் பார்க்கிறான்... பிறகு நாகத்தின் படத்தை நோக்குகிறான்...

அவன் என்ன ஒப்புவமை கருதினானோ! மீண்டும் நகை முழக்கம்...

திப்புவின் இடிகுரல் கேட்டும் அந்த நாகம் அடங்கவில்லை...

இடியோசை கேட்டு அடங்குகிற சாதாரண நாகமா அது?

ராஜநாகம்...

அதுமேலும் நிமிர்ந்து படம் விரித்து இப்படியும் அப்படியுமாக அசைந்து, தரையில் ஓங்கி அடிக்கிறது...

''பார்த்தீர்களா? நான் உங்களை ஒன்றும் செய்ய மாட்டேன் என்று சத்தியம் வைக்கிறது!'' பரிந்துரைக்கிறாள் ரங்கநாயகி.

''சீ, சீ! நீயா நானா? வா ஒருகை பார்க்கலாம் என்று இது சவாலுக்கு அழைக்கிறது.''

திப்புசுல்தான் மீண்டும் இடிநகை புரிகிறான்...

வெளியில் காவல் காத்திருந்த வீரர்களுக்குச் செய்தி தெரிந்து, ஈட்டியும் வாளுமாக உள்ளே நுழைந்து, தங்கள் சுல்தானுடைய ஆணைக்கு எதிர்பார்ப்பவர்களே போலத் துடிப்புடன் காத்து நிற்கின்றனர்.

கூடாரத்துள் பிரவேசித்த பசவராஜும், யாகின்கானும் இப்படி ராஜநாகத்தைப் படம் விரிக்க விட்டு வேடிக்கை பார்க்கிறார்களே என்று அதிர்ச்சியுற்றனர்.

''திப்பு! இதில் வேடிக்கை என்ன? கண்ட துண்டமாக வெட்டி எறிய வேண்டியது தானே?''

யாகின்கான் குரல் பதற்றமுடன் ஒலிக்கிறது.

அந்தப் புதிய உருவத்தை அதுவரையிலும் பார்த்தறியாத ரங்கநாயகி, தனது மாமனார் ஹைதர் அலிதான் வந்திருக்கிறார் என்றறிந்து பண்டியிட்டாள். அவளது அந்தச் செய்

## அம்பயர் தீர்ப்பு!

1974-75ல் காப்டன் லாயிட் தலைமையில் மேற்கிந்தியக் குழு இந்தியாவுக்கு விஜயம் செய்தது. அச்சமயம் பௌலிங் மும்மூர்த்திகளான பிரஸன்னா - பேதி - சந்திரசேகர் மேற்கிந்தியத் தீவுக் குழுவை நன்றாகப் பழி வாங்கினர். பெங்களூர், டெல்லி மேற்கிந்தியத் தீவு குழுவுக்கு வெற்றி. ஆனால் கல்கத்தாவிலும் சென்னையிலும் இந்தியாவுக்கே வெற்றி கிடைத்தது. சென்னையில் இரு கோஷ்டிகளும் சம பலமாகி வதை அனைவருமே பொங்கல் திருநாளில் பாராட்டி மகிழ்ந்தனர். இந்தச் சென்னை டெஸ்டில் இரண்டாவது இன்னிங்ஸில் காளிசரணுக்கு 'ரன் அவுட்' தீர்ப்பு. இது அவருக்குத் திருப்தி அளித்ததாகத் தெரியவில்லை. அந்தத் தீர்ப்பு இன்னும் நினைவில் இருக்க ஜாக்கிரதையாக ஆடுவாரோ காளிசரண்?



கையைக் கண்டு திப்புகல்தான் ஒரு நகைச் சுவையை ரசிப்பது மாதிரி சிரித்தான்.

''ரங்கநாயகி! நீ எப்படி இந்தப் போலித் தன நாகத்துக்கு ராஜ அந்தஸ்து கொடுத்துக் கெஞ்சுகிறாயோ அப்படியே இந்த யாகின் கானுக்கும் மரியாதை செலுத்தி இருக்கிறாய்! இவர் எந்த விதத்தில் எனது தந்தையின் உருவம் மாதிரியே அமைந்தார் என்பதுதான் பலருக்குப் புரியாத புதிர். இவர் என் தந்தையின் நண்பர், எனக்குப் பசவராஜைப்போல! ஆனால் பசவராஜ் நல்லவேளையாக எனது உருவத்தைக் கொண்டில்லை, ஆனால் என் உள்ளத்தைக் கொண்டிருக்கிறான்!''

திப்புகல்தானின் இந்த விளக்கத்தைக் கேட்டுப் பெரிதாக வியந்து போனான் ரங்கநாயகி. ஆ! அப்படியே ஹைதர் அலி மாதிரி இருக்கிறாரே... எவ்வாறு அடையாளம் கண்டு கொள்கிறீர்கள்? எல்லாம் பழக்கம் தான்...

''குமார கல்தான்! பாம்போடு விளையாடுவது நல்லதல்ல!'' என்றான் பசவராஜ்.

''நண்பா! நானே ஒரு ராஜநாகம்! இது என்னோடு விளையாடுகிறது. பாம்பைக் கண்டால் படைகள் நடுங்கும். ஆனால், திப்புவைக் கண்டால் பாம்புகளே நடுங்கும் என்ற உண்மையைப் பிரத்தியட்சமாகப் பார்க்க வேண்டாமா! இதோ பார்...'' என்று முழக்கிய திப்புகல்தான் அடுத்து தனது உருவிய வாளை உறையிலிட்டு, எதிரே நின்றிருந்த வீரர்களிடமிருந்த ஈட்டிகள் இரண்டைப் பிடுங்கி, அவற்றைத் தலைகீழாக நிறுத்தி, கூரற்ற பாகங்களைக் கிட்டிபோலச் செய்து, நிமிர்ந்து அசைந்தாடிக் கொண்டிருந்த ராஜநாகத்தை நோக்கிப் பாய்ந்தான்...

''ஐயோ! அதைக் கொன்று விடாதீர்கள்'' என்றலறியவாறு முகத்தை மூடிக் கொண்டான் ரங்கநாயகி.

சீற்றமுடன் பாய்ந்த ராஜநாகத்தின் கழுத்தைக் கிட்டியால் மடக்கிப் பிடித்துக் கொண்டான் திப்புகல்தான். ராஜநாகத்தின் சீற்றேசை புயலாகப் பறிகிறது... உடலைப் பலம் கொண்ட மட்டும் நெளித்து விடுபட முடியாது. அந்த ஈட்டிகளிலே படர்ந்து வளைந்து சுருட்டிக் கொள்கிறது...

ஈட்டிகளின் கிட்டியில் ராஜநாகத்தின் தலையை அழுத்திக் கொண்ட திப்புகல்தான், மிகவும் துணிச்சலாகத் தனது இடக்கரத்தால் அதனைத் தாவிப்பற்றிப் பெருவிரலால் அதன் வாயின் அடிப்பாகத்தை அழுத்தப் பற்றி, வலக்கரத்தில் பிடித்திருந்த ஈட்டிகளைத் தூரே தூக்கி எறிந்தான்.

இவனைக் கண்டதும் ராஜநாகமே நடுங்கி அவனது கைகளில் படர்ந்து சுருட்டிக் கொள்கிறதென்றால்...

வேறு நாகங்கள் பயப்பட என்ன ஆச்சரியமிருக்கமுடியும்?

ராஜநாகம், திப்புவின் பிடியிலிருந்து விடுபடத் தனது பலம் முழுவதையும் திரட்டி முனைகிறது...

திப்பு, நீட்டிய கை நீட்டியபடி நிறுத்தி அதன் வேதனையை ரசிக்கிறான்...

தனது இரு கைகளாலும் மூடியிருந்த முகத்தை விலக்கிப் பார்க்கிறாள் ரங்கநாயகி. அடுத்த கணம் 'வீல்' என்று கூச்சலிடுகிறாள்...

பசவராஜ், திப்புவின் பராக்கிரமத்தையும் விஷத்துணிச்சலையும் கண்டு அதிசயிக்கிறான்... இவன் இதயம் நிறைந்த மானுட ராட்சஸனோ?

''குமாரகல்தான்! தயவுசெய்து இந்த ராஜநாகத்தைக் கொன்ற பாவத்தைச் சுமக்க வேண்டாம். விட்டு விடுங்கள்.''

—ரங்கநாயகி, 'ஓ' என்று அலறுகிறாள்...

அவளது மனநிலையில் மாறுபட்டிருக்கிற சிவந்த முகத்தைக் கவனித்த திப்புகல்தான், ''ரங்கநாயகி! இதனைக் கொல்ல மாட்டேன். பயப்படாதே! விடுதலை செய்கிறேன். வேறு எந்தக் காரணத்துக்காகவுமல்ல, உன்னைப் போல இதுவும் நாமம் போட்டுக் கொண்டிருக்கிறது. உன்னை மாதிரியே அழகாக இருக்கிறது...'' என்று கூறி முடிக்கவில்லை. குறுக்கிட்ட ரங்கநாயகி, ''என்னைமாதிரியே விஷமுடையது; அல்லவா?'' என்றாள்.

ஒரு விநாடி அதிர்ந்து போனான் திப்புகல்தான்.

''விஷம்?''

''ம்ம! அழகும் அறிவுமுள்ள எந்த இடத்திலும் விஷமுண்டு என்பது பெரிய தத்துவம். அந்த விஷம் பல ரூபத்தில் வித்தியாசப்படுகிறது. அந்த விஷத்தை ஆராதித்தால் அதுவே மாணிக்கமாகிறது!''

''புரியவில்லை.''

''புரிய வைக்கிற நேரம் இதுவல்ல. ஆயிரம் பக்கங்கள் எழுதக்கூடிய பெரிய விஷயம். விஷயம் என்பதிலேயே விஷம் உண்டு. யக



ரத்தை அடித்துவிட்டால்...? யகாரம் எய்பது ... இப்போது எதற்கு? தயவுசெய்து விட்டு விடுங்கள்.''

காதலியின் அற்புதமான — அபாரமான ஞான வாசகத்தைக் கேட்ட திப்புகல்தான், பெரிதாக மகிழ்ந்து போய்க் கையில் நெளிந்து கொண்டிருந்த ராஜநாகத்தை அதனை ஒரு கணம் உற்றுநோக்கி, மறுகணம் அதனை வெளியே கொண்டுபோய், சுருட்டிக் கொண்டிருந்த அதனை ஒரு பிரிமனை போலச் செய்து, பலம் கொண்ட மட்டும் தூக்கி எறிகிறான்.

கண்டவரனைவரும் கதிகலங்கிப் போய், திப்புகல்தானின் வீரத்துணிச்சலை நெஞ்சிலே படரவிட்டுப் பயந்து, நடுங்கிப் பிரமிக்கின்றனர்.

யாகின்கானே பொறி கலங்கி அயர்ந்து போனான்!

''குமார கல்தான்! ராஜநாகம் வஞ்ச நெஞ்சமுடையது. கரம் உடையது'' என்றான் பசவராஜ்.

''நான் அதற்கு எந்தத் தீங்கும் செய்ய வில்லையே பசவராஜ்! இந்த மண்ணில் பிறந்த விஷமுடையதானாலும் அதுவும் சுதந்திரமாக வாழவேண்டும் என்ற நோக்கில்தானே பரந்த வெளியில் தூக்கி எறிந்தேன்! ஏன் தெரியுமா? அது இந்தத் தேசத்தை அடிமைப்படுத்தவந்த வெள்ளைப் பறங்கியரைத் துரத்தித் துரத்திக் கொத்தட்டும் என்பதற்காக! அல்லது தன்னிலும் சீற்றமுடைய திப்புகல்தான், அடிமைப் படுத்த வந்த வெள்ளையரை அடித்துத் துரத்துவான் என்கிற ராஜவிசுவாசத்தை இந்த ராஜநாகம் தனது இனத்துக்குப் போய்ப் பறைசாற்றட்டும் என்பதற்காகத்தான்! புரிகிறதா?''

திப்புவின் ஓங்கி ஒலித்த குரல் கேட்டு, வியந்து, பயந்து, வியர்த்துப் போன ரங்கநாயகிக்கு அப்போதுதான் சுகமாக மூச்சுப் பறிந்தது.

''ரங்கநாயகி! இது எனக்கு ஒரு நிகழ்ச்சித் திருப்பம். திப்புகல்தான் யார் என்பதை ஏனையவர் புரிந்து கொள்ள — தெரிந்து கொள்ள ஏற்பட்ட அல்லது ஏற்படுத்திக் கொண்ட விஷப்பரீட்சை! அந்த ராஜநாகத்தை நான் வாழ்த்துகிறேன்!'' என்று முழக்கிய திப்புகல்தானின் கண்கள், யாகின்கானை நோக்கின. அந்த நோக்கினில் அடங்கிய உள்ளடக்கப் பிரகடனம் ஒருவாறு ஒரு சிலருக்கு உணர்த்தியது.

இந்த ராஜநாகப் பிரகடனத்தைச் செவிமடுத்த மகாகல்தான் ஹைதர்அலிகூட வெகு நேரம் சுழிமுனையதிர்ச்சி கண்டு பிரமித்துப் போய், அதுகுறித்து அதிகமாகவே அலசி ஆலோசிக்கலானார்...

இரு தினங்கள் கண்ட ஓய்வுக்குப் பிறகு, ஹைதர் சேனைகள் ஆர்க்காட்டை நோக்கிப் பயணமாக அணிவகுத்து யுத்தகோஷமிடுகின்றன...



# ஒரு மர்மம்?



**காப்டனாக இருக்கும்போதும் சரி, ஆட்டக்காரராக இருக்கும்போதும் சரி, டீ, லஞ்ச், டீ இடைவேளைகளுக்குப் பிறகு இந்தியா பீல்டிங்குக்கு வரும்போது அவர் உள்ளே இருந்து மற்ற ஆட்டக்காரர்களுடன் சேர்ந்து பிரசன்னமாவதில்லை. ஓர் ஓவர் கழித்துத்தான் வருகிறார்! இப்படி அடிக்கடி நிகழ்கிறது. இதன் மர்மம் என்னவோ?**

---

அருமைக்காதலி ரங்கநாயகியிடம் அன்புடன் உரையாடி, ஆனந்தப் புன்னகையுடன் "ஆர்க்காட்டை வென்று, நவாப் முகமதலியை விரட்டி, அந்த நவாப் விருதை நான் பெறுகிற கோலாகலம் நிறைந்த குதூகலக்காட்சியை நீ கண்டு ரசித்துப் பெருமைப் பட்ட பிறகு, நாம் ஸ்ரீரங்கப்பட்டினம் நோக்கித் திருமணத் தம்பதிகளாய்ப் போகிற மகிழ்ச்சியுடன் பயணமாகிறோம்! அதுவரை சந்தோஷமாகவும் தைரியமாகவும் இரு! பசவராஜ் உனது நலனில் கண்ணும் கருத்துமாக இருப்பான்" என்று கூறி விடை பெற்றுக் கொண்டு தலைமை நாயகனுக்குச் சேனைக்கடலுடன் பிரவேசிக்கிறபோது...

சமுத்திர கோஷமென வெற்றி முழக்கம் வானமுகட்டைத் தொட்டுப் பூமிக்கு எதிரொலிக்கிறது...

பேராரவாரத்துடன் அணிவகுத்தும் புலிச் சின்னம் பொறித்த வட்டையணிந்தும் புலிக் கொடிகளைத் தாங்கியும் நின்ற சேனாசமுத்திரத்தை, அதிகார பலம் பொருந்திய அதிபதியின் காம்பீரியத்துடன் நின்று பார்வையிடுகிறான் மகாசுல்தான் ஹைதர் அலிகான் நவாப் பகதூர்!

அவருக்கு நேர் எதிரே, போராபரணம் பூண்டு, வெண்புரவியில் ஆரோகணித்துத் தனது அருமைத் தந்தையாரின் உத்தரவுக்காகக் காத்திருப்பவன்போல, குதிரையின் சேணங்களைப்பற்றிக் கொண்டு, அதன் துடிப்பசைவைக் கட்டுப்படுத்திக் காணப்படுகிறான், திப்புசுல்தான்.

மகாசேனாதிபதியான படே பௌஜ்தார் முகமதலியும், குலாம் உத்தீர்கானும், மகா மீர்ஜாகானும் படைகளின் அணிவகுப்பைப் பார்வையிட்ட வண்ணம் ஆங்காங்கே தயாராக நிற்கின்றனர்.

ஹைதர்அலி உரக்கச் சத்தமிட்டு உத்தரவு பிறப்பிக்கிறார்...

துடிப்பினால் அடிபோட்டுக் கொண்டு அசைந்து கொண்டிருந்த குதிரைகளின் குளம்புச் சத்தம் தவிர மற்றபடி எங்குமே நிசப்தம்...

"திப்பு, எனதருமைச் செல்வனே! ஆர்க்காட்டு நவாபை வீழ்த்த வேண்டும் என்கிற சபத முழக்கத்துடன் சிங்கத்தின் பிடரி சிலிர்த்தது போல நீ சிலிர்ப்புக்கண்டும், நமது புலியின் சீற்றம் நிறைந்த பாய்ச்சலுடன் உக்கிரம் கண்டும் நீ வீறுகொண்டு எதிர் பார்ப்பதை நானுணர்கிறேன். ஆர்க்காட்டு நவாப் முகமது அலியை, பெய்லியையும், மன்றோவையும் வீழ்த்தியதுபோல வெற்றி காண முடியும் என்று யாரும் எளிதாக நினைத்துவிட வேண்டாம். அவன் ஒரு குள்ள நரி! நமது புனிதமான இஸ்லாத்தை மறந்து, பரங்கியர்பால் மயக்கம் கொண்டு — அடிமை கொண்டு ஆனந்த சுகபோக வாழ்க்கைக்காக இந்தத் தேசத்துச் சுதந்திர உணர்விழந்து அல்லது மறந்து வாழ்கிற சுகபோக சுயநலமி! அவன் எதற்கும் துணிவான்! எதற்குமே அஞ்ச மாட்டான்! சுயநலமிகளுக்கு ஆத்மா என்பது நாற்றமடிக்கிற சாக்கடைக்கு அல்லது அழுகிப் போன பிணத்துக்கு ஒப்பானது. அதுகள் சைத்தான்களின் பிரதிநிதிகள்! எனவே அந்த ஆர்க்காட்டு நவாபுக்கு உறுதுணையாக நிற்பவர்கள், சர்வ வல்லமைமிக்க யூனியன் ஜாக்கொடி வெறியர்களான — குடிவெறியர்களான சர் அயர் கூட் என்பானும், கேப்டன் ஹம்பர்ஸ்டோன் என்பானும், ஜெனரல் மத்யூஸ் என்பானும் ஆவார்கள். ஆகவேதான் நான் இன்று பொறுத்து நாளை அல்லது நாளைய மறுதினம் புறப்பட்டுப் பின்தொடர நினைக்கிறேன். இது எனது தனிப்பட்ட போர்முறைத் தந்திரம்! ஆர்க்காட்டை வளைக்க வேண்டுமானால் நீங்கள் பாலாற்றங்கரையின் தென் கரையில் முகாமிட வேண்டும். நமது குதிரைப்படைகளைக் கலசபாக்கத்தை யொட்டி வரிசைப்படுத்த வேண்டும். நான் சற்று வழியானாலும் வேலூர் மார்க்கமாக



**சின்னஞ்சிறு வயதில் கிர்மானி பாட்ஸ்மனாகத்தான் பயிற்சி செய்து வந்தார். அவரோடு ஆடிய மற்றச் சிறுவர்கள் இவரை விக்கெட் கீப்பிங்குக்குப் பிடித்துத் தள்ளினர். சின்னஞ்சிறுவர்கள் பந்து வீச்சில் பந்தைத் தடுக்க முடியா விட்டால் பந்தைத் தூக்கிக் கொண்டு வெகு தூரம் ஓட வேண்டுமே? அதற்காகக் கிர்மானி இளம் வயதில் கையில் செங்கலைப் பிடித்துக் கொண்டு பந்தை நழுவ விடாமல் தடுத்தார். சிலகாலத்துக்குப் பிறகு கிர்மானி 'கையுறை' அணிந்து கொண்டு விக்கெட் கீப்பிங் கலையில் தேர்ந்தார்.**

# சுபிட்சம்

விவசாயத்துறையில் பசுமைப் புரட்சி, சிறுதொழில் வளர்ச்சிகளுக்கு ஊக்கமளிப்பது, புதிய வேலை வாய்ப்பினை வளர்த்துக் கொள்வது போன்ற பல தேசிய வளர்ச்சித் திட்டங்களுக்கு வழி காட்டுவதே லக்ஷ்மி விலாஸ் பாங்கின் குறிக்கோள். தென்னிந்தியா முழுவதிலும் பரவியுள்ள எமது 139 கிளைகளில் பாதிக்கு மேல் கிராமப்புறங்களிலும், நகர்ப்புறங்களிலும் அமையப் பெற்று, செல்வச் செழுமையை மேலும் வளர்த்துக்கொள்ள சிறப்பாக பணியாற்றுகிறது.

ஏற்றுமதி, இறக்குமதி, வாணிப வளர்ச்சிகளுக்கு உதவவும், நாட்டிற்கு அன்னிய செலாவணியை ஈட்டவும், நிபுணத்துவம் வாய்ந்த பணியை அளிக்க முன் வந்திருக்கிறது. எங்கள் வங்கியின் முன்னேற்றப்பாதையில் எங்களை ஆதரிக்கும் வாடிக்கையாளர்களின் துணையுடன் பொதுமக்களுக்கு தொண்டு செய்வதையே கொள்கையாகக் கொண்டு செல்வச் செழுமையை வளர்ப்பதே லக்ஷ்மி விலாஸ் பாங்கின் குறிக்கோள்.




**லக்ஷ்மி விலாஸ் பாங்க் லிமிடெட்**

பதிவு அலுவலகம்: கரூர்-639 001
நிர்வாக அலுவலகம்: சென்னை-600 086.

SUSAK/LVB/511/79






ஜெயசிம்மா மட்டை பிடித்துக் கொண்டு மைதானத்துக்குள் இறங்கியதும், ஆடத் தொடங்குவதற்கு முன்னால் தம் இடது கையிலுள்ள கையுறையைத் தம் உதட்டின் அருகில் கொணர்ந்து அதை முத்தமிடுவது போல் பாவனை செய்வார். ஜெய சிம்மாவிடம் சொந்தத்தில் எத்தனை மட்டைகள் இருந்தாலும் டெஸ்ட் பந்தயங்களில் மற்றவர்கள் மட்டையையே பயன்படுத்துவது வழக்கம்.

---

வந்து விஷாரத்தில் முகாமிடுவேன். ஆகவே தாக்குகிறபோது அவர்கள் சிதறியோடாதவாறு நாம் கவனமாக வியூகித்து வளைத்துச் சரணடையச் செய்ய வேண்டும். ஆர்க்காட்டு நவாப் முகமதலி தப்பியோட வழிவகுத்து விடாமல் சர்வ ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். கூடுமான வரையில் எதிரிகளின் பீரங்கிகளையும் துப்பாக்கிகளையும் பறிமுதல் செய்வதில் உங்கள் தந்திரம் செயல்பட வேண்டும். ஏனென்றால் ஆர்க்காட்டு நவாப் பீரங்கிபலம் பொருந்தியவன்.''

ஹைதர்அலியின் இந்தப் போர்ப்பிரகடனம் நிரம்பவும் முக்கியத்துவம் வாய்ந்ததாக இருந்தது.

ஒருகணம் வானத்தை அண்ணாந்து கவனிக்கிறார்...

''யா... அல்லாஹ்...''

அவரது நெஞ்சு முனகி வழிபடுகிறது.

அதிலே ஒரு பிராயச்சித்தமும் தனது ராஜநலம் கருதி — ராஜதந்திரமென்கிற புனிதநீரால் கழுவப்பட்டுப் பாவக்கறை போக்க வேண்டி ஊசலாடுகிறது...

மீண்டும் தன்னிலைக்கு வந்து குமாரன் திப்புசுல்தானை நோக்கி, ''சேனைகள் புறப்படலாம்!'' என்று ஆணை பிறப்பிக்கிறார்.

ஜோதிடர் சொன்ன நீலக்கல் மோதிரம் அணிந்து கொண்டிருந்த திப்புசுல்தான், ஒரு கணம் ஆண்டவனை வழிபட்டு, மறுகணம் நீலக்கல் மோதிரத்தைக் கவனித்து வாளை உருவி இரண்டாம் ஆணையாக அவனது நாவிலிருந்து உத்தரவு பிறக்கிறது.

தொடர்ந்து பீரங்கி முழங்குகிறது...

போர் முரசம் ஆர்க்கிறது...

சேனைகள் ஆர்க்காட்டை நோக்கிப் பயணமாகின்றன.

தொலைவிலிருந்து கவனித்த ரங்கநாயகி, ஏனோ கண்கள் கலங்கக் கவனிக்கிறாள். அவளது வலது கண்ணும், வலது தோளும் துடிக்கின்றன.

ஏதோ ஒரு துன்பத்தின் அறிகுறி போலத் தோன்றுகின்றன.

யுத்தத்தில் கலந்து கொண்டு தனது வீரம் நிறைந்த ஆற்றலை வெளிப்படுத்த முடியவில்லையே என்ற வேதனையுடன் கூடாரத்தை நோக்கி நடக்கிறான் பசவராஜ்.

கூடாரத்துள் நுழைந்த ஹைதர்அலி, தம்மைத் தொடர்ந்து வந்த ராஜாக்கானைக் கூர்ந்து கவனிக்கிறார். அந்தக் கவனிப்பில் பல ரகசியங்கள் தொக்கி நின்றன. அவற்றுக் காகத்தானே அவனைத் தம்முடன் அழைத்துச் செல்ல நிறுத்திக் கொண்டதே...

''ராஜாக்கான்! இன்றிரவு நமது திட்டப்படி பசவராஜையும் ரங்கநாயகியையும் எனது நகரான *ஹைதர் நகருக்குக் கொண்டு போய் மிகவும் ரகசியமாகச் சிறைவைக்க ஏற்பாடு செய்ய வேண்டும்! நீயும் புறப்பட்டுப் போய்விடப் போகிறாய்! அது சந்தேகத்தையுண்டு பண்ணும். இது பரம ரகசியமானது.''

—ஹைதர் அலியின் குரல் காற்றோடு காற்றாக ஒலிக்கிறது.

''ஹுஸூர்! சிறையிலடைப்பதைக் காட்டிலும் தீர்த்துக் கட்டிப் புதைத்துவிடுவது நல்லது என்று நேற்றிரவு ஆலோசிக்கப்பட்டதே!''

தனது காழ்ப்பை நிறைவேற்றிக் கொள்ளவும் அதே நேரத்தில் மகாகல்தானுக்கு எரிச்சல் காணக்கூடாது என்றும் உணர்ந்து, மிகுந்த மரியாதையுடனும் ரகசியமாகவும் மறந்துவிட்டதை வெளிப்படுத்துபவன் போலச் சொன்னான் ராஜாக்கான்.

ஹைதர் அலியும், குறுந்தாடியைக் கீழிருந்து தடவிக் கொண்டே, ''அப்படித்தான் முதலில் நினைத்தேன். இதில்பல தொல்லைகள் முளைக்கலாம். நமது திட்டப்படி பரப்ப இருக்கும் பிரசாரத்தின் மூலம் திப்புவின் எதிருணர்வு என்ன என்பதையறிந்து, பிறகு, இந்தத் திட்டத்தை ஹைதர் நகரிலேயே நிறைவேற்றிவிடலாம். ஆனால் ஒன்றை ஞாபகத்தில் வைத்துக்கொள். எனது உத்தரவின்றி அவர்களுக்கு எந்தத் தீங்கும் ஏற்பட்டுவிடக்கூடாது. இது ராஜநாகமான திப்புவின் பிரச்னை! பிறகு தேசத்தின் பிரச்னையாகிவிடக்கூடாது. ஒரு நன்மையை உத்தேசித்துச் செய்யப்போகிற இக்காரியம் பல தீமைகளையுண்டு பண்ணி விஷமாகி விடக்கூடாது. ரங்கநாயகியை அரசியாருக்குப் பிடிக்கவில்லை. பசவராஜை அதிகாரிகளுக்குப் பிடிக்கவில்லை. இதனை ரொம்பவும் கத்திமேல் நடப்பதுபோலச் செய்து முடிக்க வேண்டும். மகா ராஜதந்திரியான யாகின்கானைக் கலந்து ஆலோசித்துச் செய்து முடி! ஜாக்கிரதை!'' என்று கூறுகிறபோது அவரது உள்மனம் வெகுவாக அலைமோதியது. அவருக்கும்கூட இந்த ரங்கநாயகி, பசவராஜ் விஷயம் எரிச்சலையுண்டு பண்ணிக்கொண்டுதானிருந்தது.

மகாகல்தான் ஹைதர் அலியின் இந்த ஆணையைத் தலைவணங்கி ஏற்ற ராஜாக்கானின் உள்ளமோ...?

அந்தப் பதினெட்டுக் கசையடிகளை எண்ணிக் கொண்டிருந்தது!

(தொடரும்)

---

* பேடனூர்

## கட்டற்ற விடுதலை காற்றுப்போலே

நீலவானில் சிறகடிக்கும் பறவைகள்,
நாலு திக்கும் நம் சுதந்திரக் காற்று
சேலையிலே அதன் மென்மை தழுவுதடி...
கோல வண்ண, வடிவழகுகளாய் நம்
சேலைகளில் இயற்கை செழிக்குதடி...
சிறகடிப்போம் பறவைகளாய் –

எதுவோ அவர்கள் சேலைகள்? இயற்கையாக... மபத்லால்.




**மபத்லால் துணிவகைகள்:**

சூட்டிங் • ஷர்ட்டிங் • சேலைகள்
• டிரெஸ் மெட்டீரியல்ஸ் • ஷீட்

everest/461/MS-tm

3

# நரிக் கொம்பு

'கிருஷ்ணவேணி'

''ஆண்டவா! தலையில் ஏன் இப்படியொரு வலி?'' ரமேஷ் தலையைக் குலுக்கிக் கொண்டான். — இல்லை குலுக்கி அசைக்க வேண்டுமென்று நினைத்தான். 'பார்க்கும் பொருள் தெளிவாகத் தெரியாதா?' என்று தவித்தது அவன் மனம். அதேபோல 'நினைவிலும் தெளிவு பிறக்காதா?' என்று ஏங்கினான். உடலை முறித்து நெளிக்க முயன்றான். ஆனால் கை, கால்களோ துணியாகச் சொரணையின்றிக் கிடந்தன. யாரோ அவன் தலையைத் தூக்கி நிமிர்த்திக் கொண்டார்கள். பலவந்தமாக அவன் வாயினுள் 'அதை' ஊற்றினார்கள். காய்ந்து கிடந்த நெஞ்சில் அது எரிச்சலோடு இறங்கியது.

'என்னைக் குடியனாக்கப் பார்க்கிறார்கள். மதுவை என்னுள்ளே பலவந்தமாகச் செலுத்துகிறார்கள். ... ஏன்... எதற்காக?...' வினா எழுப்பியது ரமேஷின் மனம். ஆனால் விடை காணும் தெளிவோ தெம்போ அவனிடம் இல்லை. உள்ளே செலுத்திய அந்த எரிச்சலூட்டும் திரவம் அவனுள் ஒரு புதிய வேகத்தை — தசைகளிலும் உணர்விலும் ஓடவிட்டது. அந்த அரை மயக்க நிலையிலும் 'எழுந்திருக்க வேண்டும், இவர்களிடமிருந்து விடுபட்டு ஓடவேண்டும்' என்று ஆவலை முடுக்கி விடுவது அந்த நெருப்புத் திரவம் தானோ? அவனை அசக்தனாக்கி இருப்பதும் அந்தத் திரவம்தானே.

தன்னை யாரோ தூக்குவதை உணர்ந்தான் ரமேஷ். தன்னை எங்கோ கொண்டு போகிறார்கள் என்பதும் புரிந்தது அவனுக்கு. 'தன்னை எதிலோ ஏற்றுகிறார்கள்... அருகில் அவர்களும் அமருகிறார்கள்... ஏதோ நகருகிறது... அந்த உறுமல் ஒலி... வேகம்... கார்தான்... தன்னைக்காரில் ஏற்றிப் போகிறார்களோ? எங்கே... எதற்காக...? அறையின் புழுக்கமும், இறுக்கமும் மறைந்து சுத்தமான காற்று... குளிர்ந்த காற்று முகத்தில் மோதுகிறதே... அப்பாடா!'

பேசவேண்டும், குளிர் காற்றுப் படும்படி தன்னை வெளியே கூட்டிப் போவதற்கு நன்றி தெரிவிக்க வேண்டுமென்று துடித்தான் ரமேஷ். பெருமுயற்சி செய்தான். ஆனால் வார்த்தைகள் தொண்டைக் குழியிலேயே உருவாகி உடைந்து உருத்தெரியாமல் அழிந்தன. ஏதோ பாரமாக, கனமாகத் தலையில் அழுத்தியது. வண்டி சீறிக்கொண்டு வெகு வேகமாகப் போயிற்று. குளிர்ந்த காற்று 'பளார் பளார்' என்று முகத்தில் வந்து மோதுவது வேகத்தின் அளவைக் காட்டியது. அதன்பிறகு சட்டென்று ஏதுமே நிகழாதபடி ஒரு ஸ்தம்பிதம்... அமைதி. காத்திருப்பது எதற்காக, எங்கு...?

திடீரென்று புயலாக 'ஓ'வென்ற ஒலியோடு சூறைக்காற்று. மூடுபனியாக உருவங்களே புலனாகாதபடி இருந்த பார்வையிலே, மின்னலாகக் கண்களைக் குருடாக்கும் அந்த ஒளியும், உறுமும் ஓசையும்.. தன்னை நோக்கிப் பூதாகாரமாக அப்படி நிலமே கிடுகிடுக்க வருவது... ரயிலா...? 'ஐயோ! ரயில் தண்டவாளத்திலா கிடத்தப்பட்டிருக்கிறேன் நான்?' ரமேஷின் உணர்வுகள் உதறிக்கொண்டு ஓலமிட முற்படுமுன்...

எல்லாமே அமைதியாகி விட்டன. இந்தச் சொப்பனாவஸ்தை, மரணாவஸ்தைகளிலிருந்து விடுபட்டவனாகி விட்டான் ரமேஷ்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு காலை ஏழுமணிக்கு ஹரியைத் தேடி ஒரு தந்தி வந்தது.

நண்பர் ரமேஷ் ரயிலிலிருந்து தவறி விழுந்து மரணமடைந்தார். எதிர்பாராத விபத்து என்பது உறுதிச் செய்யப்பட்டு விட்டது. விதவை மனைவி அந்நா, ரமேஷின் அஸ்தியுடன் வருகிறாள். உங்களைச் சந்திக்க விரும்புகிறேன்.

கல்கத்தாவுக்கு அருகேயுள்ள ஓர் ஊரின் ரயில் நிலைய அதிகாரியின் கையொப்பம் தந்தியிலிருந்தது.

தள்ளு கதவைப் பிடித்துக்கொண்டு நந்தினி நின்றாள். காகிதச் சுருள்களும், வரைபடங்களும் புத்தகங்களும் பேப்பர் கட்டிங்குகளும் புகைப்படங்களும் தாறுமாறாகக் கிடந்த அந்தக் களேபரத்தையும் கூடக் கவர்ச்சியாக்கிற்று நந்தினியின் அழகு. கட்டான உடல். நல்ல உயரம். அவள் அணிந்திருந்த ஆடை அந்தச் சந்தனமேனியால் அழகு பெற்றது. பிரபல வாரப் பத்திரிகையின் மாதர் பகுதியைத் திறம்பட நிர்வகிக்கும் ஒருபெண் கவர்ச்சியாக இருக்க வேண்டாமோ? நந்தினி இயற்கையிலேயே அழகி. அவள் வகிக்கும் பொறுப்பும் பதவியும் அவளுக்கு மேலும் அழகூட்டின. ஆண்மையின் கம்பீரம் கலந்த பெண்மை நந்தினியின் உருவம்.

''ஹலோ ஹரி...!'' வீணையின் நாதமாக ஒலித்தது அவள் குரல். ஸ்கெட்ச் போர்டில் குனிந்தபடி வேலையில் மூழ்கிக்கிடந்த ஹரி திரும்பாமலேயே ''ஹாய், நந்தினி! லஞ்சுக்கா? ஹோட்டல் புளூ ஸ்டாருக்குத்தானே?'' என்றான்.

தள்ளு கதவிலிருந்து விடுபட்டு உள்ளே வந்தாள் நந்தினி. ''எனக்கு ஒரு அப்பாயின்ட்மெண்ட் இருக்கிறது. ஒருமணி நேரம்தான் அவகாசம். அலுவலகங்களின் பகல் உணவுக் கூட்டத்திலிருந்து தப்ப புளூ ஸ்டார்தான் சிறந்த இடம்'' என்றபடியே ஹரியின் மேஜை விளிம்பில் ஒயிலாக உட்கார்ந்தாள்.

ரமேஷ் இருக்கும்போது மூவரும் புளு ஸ்டாருக்குத்தான் போவார்கள்! மனம் விட்டுப் பேசிமகிழ அவர்கள் தேர்ந்தெடுத்திருந்த ஹோட்டல் அது. ஆனால் அப்போதெல்லாம் பேசுபவன் ரமேஷாகவும் கேட்பவர்கள் நந்தினியாகவும் ஹரியுமாகவே இருப்பார்கள். பழைய நினைவுகளின் நெருடலினால்தானோ என்னவோ இருவரும் ஒருவரை ஒருவர் மௌனமாகச் சில விநாடிகள் விழுங்கிக் கொண்டனர். ஹரி, மௌனமாகக் கோட்டை மாட்டிக் கொண்டு கிளம்பினான் ஹோட்டல் புளு ஸ்டாருக்கு.

வழக்கமாக அவர்கள் அமரும் அதே மேஜையில் போய் அமர்ந்தார்கள். ஸர்வர் மௌனமாக மெனு கார்டை நீட்டினான். 'என்ன ஆர்டர் செய்ய?' என்பது போல ஹரி நந்தினியைப் பார்த்தான். அவள் தோள்களை உயர்த்தித்தழைத்தாள்.

''ஏதாவது ஆர்டர் செய்யுங்கள்'' என்றாள் நந்தினி. ஹரியிடம் சர்வர் ஆர்டரை ஏற்று நகர்ந்தான்.

''அந்தச் சம்பவத்தில் தவறு ஏற்படுவதற்கு 'சான்ஸே' கிடையாதா ஹரி? அதாவது விபத்தில், இறந்தது ரமேஷாக இல்லாமல் வேறு யாராகவாவது இருக்கக் கூடாதா?''

ஹரி அவள் உள்ளத்தை, உணர்ச்சிகளைப் படித்தவனாகத் தனது நீண்ட வலுவான கைகளினால் அவளது மிருதுவான கையைப் பற்றி இதமாக அழுத்தினான் ஆதரவாக. ''தவறு நேர்வதற்குச் சாத்தியமே இல்லை நந்தினி.''

அவள் சுந்தரமுகம் சூம்பிப் போயிற்று. மேஜை மீதிருந்த சர்க்கரைக் கிண்ணத்திலிருந்து ஸ்பூனை எடுத்து மேஜையில் கோலம் போட்டது அவள் கை. அதில் ஒரு பச்சைக்கல் மோதிரம் பளபளத்தது. அவள் பிறந்த நாளுக்காகவும் தன் காதல் பரிசாகவும் கடந்த ஆண்டு ரமேஷ் அதை அவள் விரல்களில் அணிவித்தது அவள் நினைவுக்கு வந்தது. அந்த நினைவு அவள் நெஞ்சில் உதிரத்தைக் கசிய வைத்தது.

''ரமேஷ் ரயிலிலிருந்து விழுந்திருக்கவே மாட்டார். எவ்வளவோ பிரயாணம் செய்தவர். எத்தனை திறமைசாலி, பலசாலி! அவராவது ஓடும் ரயிலிலிருந்து தவறி விழுவதாவது'' என்றாள் நந்தினி. அவள் குரல் கம்மிப் போயிருந்தது.

''ரமேஷ் குடிபோதையிலிருந்ததாகக் கூறுகிறார்கள். காற்றுக்காகக் கதவைத் திறந்து கொண்டு கதவோரத்தில் நின்றதாகவும், அப்போது எதிர்த்திசையிலிருந்து வந்த எக்ஸ்பிரஸ் வண்டியின் ஹெட்லைட் அவர் பார்வையைக் குருடாக்க நிலைதடுமாறி ஓடும் வண்டியிலிருந்து கீழே விழுந்து விட்டதாகவும் கூறுகிறார்கள். அந்த வேளையில் அந்த இடத்தில் இதற்குச் சாட்சிகள் யாருமில்லை.'' அவள் முகத்தைப் பார்க்காமலேயே கூறினான் ஹரி.

''ரமேஷ் குடிப்பவரில்லை. மது அருந்தி நான் பார்த்ததே இல்லை..'' என்ற நந்தினி அழுது விடுவாள் போலிருந்தது.

ரபேஷின் தொலைதூரப் ஃபோன்காலைப் பற்றி — அப்போது அவன் குரல் விநோதமாக ஒலித்ததை — இவளிடம் இப்போது கூறக் கூடாது என்ற முடிவோடு ஹரி சொன்னான்: ''ரபேஷ் குடித்ததை நானும் பார்த்ததில்லை. ஆனால் அதை நிரூபிக்க நாம் அங்கு இல்லையே.''

இத்தனை நாழிகை அழுத்தி வைத்திருந்த அழுகை பீறிட்டுக் கொண்டு வெடித்தது நந்தினியிடம்.

''ரபேஷ்... ரபேஷ்... என் அருமை ரபேஷ்...'' விம்மினாள். மெதுவாக முனகியவாறே அரற்றினாள். அவளுக்கு ஆறுதல் கூறிச் சமாதானப்படுத்த ஹரியிடம் வார்த்தைகளே உருவாகவில்லை. எந்த ஆறுதலும் அந்தக் காதல் உள்ளத்தின் தவிப்பைச் சமாதானப் படுத்த முடியாதென்பதையும் அவன் அறிவான். அழுகை ஒன்றினால்தான் அவளுக்கு ஆறுதல் ஏற்படும் என்பதை அறிந்த ஹரி மௌனமாக அமர்ந்திருந்தான். (தொடரும்



இடிஅமீனின் ஆஸ்தான மந்திரவாதிக்கு உடம்பு சரியில்லாததால் இங்கிலாந்துக்கு வந்து நிபுணரிடம் உடம்பைக் காண்பித்தார். அத்துடன் நில்லாமல் . தம் நாட்டைவிட இங்கிலாந்து மந்திர மாயத்தில் முன்னேறியிருக்கிறதா என்றும் பார்க்க விரும்பினார். நோய் தீர்ந்து தம் நாட்டுக்குத் திரும்பியவுடன் மந்திரவாதியிடம் இடிஅமீன் "இங்கிலாந்தில் மந்திர மாயம்" எவ்வளவு முன்னேறியுள்ளது?" என்று கேட்டாராம். "ரொம்ப முன்னேற்றம்" என்றார் மந்திரவாதி. "ஒருநாள் ஒரு மைதானத்தில் ஆயிரக் கணக்கான மக்கள்கொளுத்தும் வெய்யிலையும் பொருட்படுத்தாமல் மந்திர கோஷம் செய்தார்கள். ஒரு மனிதன் மைதானத்தின் மையத்திற்குச் சென்று எதிரும் புதிருமாக மூன்று மூன்றுகட்டைகளை நட்டார். வெள்ளை தொப்பி அணிந்த இருவர் நடந்து வந்து தங்கள் கையில் இருந்த சிறு மரப்பொருள்களை அந்த ஆறு கட்டைகளின் மேல் வைத்தனர். பிறகு பதினொருபேர்கள் வந்தனர். அப்புறம் இருவர்

---

# மைனர் விவகாரம்

## பூர்ணம் விசுவநாதன்

நான் கத்திய கத்தல் ஊர்பூராவும் கேட்டிருக்க வேண்டும். கேட்டவர்கள் என் கொள்கையைப் புரிந்து கொண்டிருப்பார்கள் தெளிவாக...

கரடகன் – தமனகன் போல் இருவரும் என் எதிரே நின்று கொண்டிருக்க, நான் அவர்களுடைய குணக்கேடு பற்றி விளாசு விளாசென்று விளாசினேன். அவர்கள் செய்திருந்த காரியங்கள் நியாயமாகப் பார்த்தால் அவர்களுக்கு ஆயுள் தண்டனை வாங்கிக் கொடுக்கக் கூடியவை என்பதை அடித்துச் சொன்னேன்.

பெரியவன் முத்துவுக்கு ஆறுவயதுகூட நிறையவில்லை, சின்னவன் கணவதிக்கு நாலே வயதுதான். இருவரும் கண்களில் குரூரம் பளிச்சிட நின்றுகொண்டு என்னையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார்கள். நான் கொட்டிய கனல் தெறிக்கும் வார்த்தைகளில் எத்தனை அவர்களுக்குப் புரிந்தனவோ, தெரியாது. வார்த்தைகள் புரியாவிட்டாலும் பரவாயில்லை, நான் பேசிய விதத்திலிருந்தும் என் அபிநயத்திலிருந்தும் என் மனக் கொந்தளிப்பை அவர்கள் தெளிவாகவே புரிந்து கொண்டார்கள். அவர்களுடைய அட்டூழியங்களைப் பற்றிக் கனகத்திடம் ஏற்கெனவே நிறையக் கத்தி முடித்துவிட்டேன். அவள் என்ன செய்வாள், பாவம்! இந்தப் பயல்கள் மீது அவளுக்கு எவ்வித கண்ட்ரோலும் இல்லாமல்போய் நெடுங்காலமாகி விட்டதே! இனி இவர்களையே நேரில் தாக்குவது ஒன்றுதானே எனக்கு வழி!

என்னதான் நடந்தது?

முதலிலிருந்து சொல்வதென்றால் அழகப்பன் வீட்டிலிருந்து ஆரம்பிக்க வேண்டும். இத்தனை கோளாறுக்கும் அவன்தான் காரணம். சிலபேருக்குச் சிலசமயங்களில் நாக்கில் கண்ட்ரோல் இருப்பதில்லை. எதையாவது உளறித் தொலைத்து விடுகிறார்கள். அன்றைக்கு நாங்கள் நால்வருமாக அழகப்பன் வீட்டுக்கு 'விஸிட்' போயிருந்தோம். அழகப்பனுக்குக் குழந்தைகள் இடையாது. அவனுக்கும் அவன் மனைவிக்கும் எங்கள் வீட்டு ராட்சஸப் பயல்களிடம் ஒரே அபிமானம். நாங்கள் போனால் அவர்களிருவரும் இந்தப் பயல்களோடுதான் முழுநேரமும் செலவிடுவார்கள். அங்கே போயும் நானும் கனகமும்தான் டிராயிங் ரூமில் அமர்ந்து பேசிக் கொண்டிருப்போமாதலால் எங்களுக்கு எங்கள் வீட்டிலேயே இருப்பது போலிருக்கும்.

அன்றைக்கும் அப்படித்தான். நானும் கனகமும் பேசிக் கொண்டிருந்தோம்; அழகப்பனும் அவன் மனைவியும், முத்துவையும், கணவதியையும் உள்ளே அழைத்துச் சென்றிருந்தார்கள்.

அழகப்பன் வீட்டில் 'ராணி' என்று ஓர் அல்சேஷன் நாய் உண்டு. எங்களைக்



நங்கள் கையில் ஒரு பெரிய கட்டையை எடுத்துக்கொண்டு வந்து நின்றார்கள். ஒருவர் ஒரு சிவப்புப் பந்தைக் கையில் எடுத்துத் தம் சட்டையில் தேய்த்துக் கொண்டார். பிறகு தம் பாண்ட்டில் தேய்த்தார். அவ்வளவுதான். உடனே மழை பெய்ய ஆரம்பித்தது. விடாமல் ஐந்து மணி நேரம் தொடர்ந்து மழை வரவழைக்க எவ்வளவு சக்தி வாய்ந்த மந்திரச் சடங்கு பார்த்தீர்களா?

—ருக்மணி ராமச்சந்திரன்.



கண்டவுடன் ராணி, வாசல் ஜன்னல் கம்பியிலிருந்து பாய்ந்து வந்து, கழுத்தையே சங்கிலி துண்டித்துவிடுமோ என்னும் அளவுக்கு இழுத்துப் பின்னங்கால்களால் நின்று கொண்டு முத்து – கணபதி ஜோடியிடம் பல்லிளிக்கும்.

அன்றைக்கு நாங்கள் அழகப்பன் வீட்டுக்குச் சென்றபோது வாசலில் ராணியைக் காணவில்லை. ஆனால் பையன்கள் உள்ளே ஓடிய கொஞ்ச நேரத்துக்கெல்லாம் ராணியின் கொஞ்சலான குரைப்புடன் இன்னும் ஒன்றிரண்டு இளங் குரைப்புகளும் கேட்டதால் நானும் கனகமும்கூட உள்ளே சென்றோம். அங்கே பின்முற்றத்தில் ராணியுடன் இரண்டு நாய்க் குட்டிகளும் துள்ளி விளையாடிக் கொண்டிருந்ததை எல்லோரும் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தார்கள். முந்தின 'விஸிட்'டுக்கப்புறம் நாங்கள் விட்டிருந்த மூன்றுமாத இடைவெளியில் ராணி குட்டி போட்டிருந்தது. 'குப்பி', 'கோவிந்தன்', என்று அந்தக் குட்டிகளுக்குக் குத்து மதிப்பாக ஏதோ பேர் வைத்திருந்தான் அழகப்பன். ''நாய் வளக்கக் கத்துக்கிட்டிருக்கே. மாடர்னு பேர் வெக்கத் தெரியலியே'' என்று நான் கடிந்து கொண்டேன். ஆனால் அப்போது சொல்லி என்ன பிரயோசனம்! 'குப்பி' 'கோவிந்தா' என்றுகூப்பிட்டால்தான் அந்தக் குட்டிகள் திரும்பிப் பார்த்தன.

என் கொள்கையைச் சொல்லி விடுகிறேன். எனக்கு நாய் வளர்ப்பது பிடிக்காது. கண்ட குப்பை மேட்டிலெல்லாம் புரண்ட உடம்புடனேயே அது படுக்கையிலும் விழுந்து உருளுவதை நான் வெறுப்பவன்.

அன்றும் அழகப்பன் வீட்டிலிருந்து திரும்பி வந்ததும் இதைத்தான் 'எத்தனையோவாவது' தடவையாகத் திரும்பிச் சொன்னேன். பயல்கள் இருவருக்கும் திடீரென்று முகம் மாறியது. ''யப்பா வேணும்ப்பா'', என்றான் கணபதி. ''ஆமாம்ப்பா, மாமா தர்றேன்னுருக்காரு'' என்றான் மூத்தவன். எங்கேயோ அபஸ்வரம் தட்டுவது போல் எனக்குத் தோன்றியதால் கனகத்தைப் பார்த்தேன். அவள் பரிவுடன் இளைய தலைமுறையைப் பார்த்துவிட்டுத் தலைகுனிந்தாள். ''என்ன சூழ்ச்சி? சொல்லப் போறியா இல்லியா?'' என்றுக் கனகத்திடம் கதறினேன். சொன்னாள்.

இந்த அழகப்பனுக்கு மூளையே இடையாது. விவரமறியாத சின்னப்

பையன்கள் மனத்தில் சபலத்தைக் கிளப்பி விட்டிருந்தான்.

''வேணுன்னு குப்பியையோ கோவிந்தனையோ எடுத்திட்டுப் போங்களேன்'' என்று அவர்களிடம் கூறியிருந்தான். அதனுல்தான் வீட்டில் மாற்றுக் கருத்து தலைதூக்கியது.

அவ்வளவுதான். எனக்கு ஆவேசமே வந்து விட்டது. கண்ணை மூடிக்கொண்டு மனம் போனபடி கத்தித் தீர்த்தேன்.

என்னுடைய 'டீச்சர்' சிலசமயம் எனக்கே புரிவதில்லை. உலகமே இடிந்து விழுந்து விட்டதுபோல அவ்வளவு கூப்பாடு போட்டேனே! எப்படி இந்தச் சில மணி நேரத்துக்குள் மனம்மாறி இந்தப் பயல்களிடம் ஏகப்பட்ட பரிவுடன் அவர்களுடைய தூதுவனாக அழகப்பன் வீட்டுக்கு ஓடிவந்தேன்? இவ்வளவு இளகின மனசு இருப்பதால்தானே என்னவோ, என் கொள்கை எதையும் உறுதியாய் நிறுத்த முடியாமல் திணறுகிறேன்.

குப்பியைவிடக் குப்பியின் உடன்பிறப்பான கோவிந்தன்தான் சாது என்று அழகப்பன் கூறியதால் கோவிந்தனைத் தூக்கிக் கொண்டு வீடு திரும்பினேன். அப்போது மாலை மணி ஐந்து. இளைய ஜோடி கொண்டாட்டம் போட்டது. நான் அந்தக் கொண்டாட்டத்தை மிதப் படுத்தினேன். கோபாவேசம் முழுவதையும் தியாகம் செய்துவிட்டு நான் இவ்வளவுதூரம் இறங்கி வந்திருந்ததால் என்னுடைய பேச்சுக்கு முழுமதிப்புத் தரவேண்டும் என்று வற்புறுத்தினேன். இருவரும் கோவிந்தனைத் தூரத்திலிருந்துதான் பார்க்க வேண்டும் என்று உத்தரவு போட்டு விட்டு, ஒரு சடம்புக் கயிற்றைத் தேடியெடுத்தேன். நான் ஜன்னல் கம்பியில் சடம்புக் கயிற்றைக் கட்டுவதற்காகவே காத்திருந்தது போல் கோவிந்தன் சுவரோரமாகப் படுத்துக் கண்களை அரை குறையாக மூடிக்கொண்டு, தன் பிறப்பை நினைத்து மருக ஆரம்பித்தது. சரியான மொந்து இந்தக் கோவிந்தன்!



மறுநாள் காலை நான் ஆபீசுக்குப் புறப்படும்வரை விபரீதச் சம்பவம் எதும் நிகழ வில்லை. மாலையில் நான் வீடு திரும்பிய போது வீடு தலைகீழாகக் கிடந்தது.

ஜன்னல் கம்பியில் சடம்புக் கயிற்றுல் புதியதொரு நாய்க்குட்டி கட்டப்பட்டிருந்தது. கோவிந்தன் சாம்பல் நிறம், ஆனுல் இது பெரும்பாலும் நீல நிறத்தில் அங்கங்கே சிறு சிறு சாம்பல் திட்டுக்களுடன் காட்சியளித்தது. எனக்குத் தூக்கி வாரிப் போடுவதற்குள் சற்றே தள்ளி அலங்கோல ஆண்டிகளாக முத்துவும் கணவதியும், சரக் கசமாகிக் கிழிந்துபோன டிராயருடன் கோரமாக நின்று கொண்டிருந்ததைக் கண்டேன். ஒன்றும் புரியாமல் ''கோவிந்தன் எங்கே?'' என்று சுற்றுமுற்றும் பார்த்துக் கேட்டேன். ''இதுதான் கோவிந்தன்'' என்று மூன்று பேரும் நீல நாயைச் சுட்டிக் காட்டினுர்கள். நான் அலறிக் கொண்டே உற்றுப் பார்த்தேன்! நீலச் சாயத்துடன் கோவிந்தன்!

காலையில் எனக்கு முன்னுலேயே ஸ்கூலுக்குப் புறப்பட்டுப் போன முத்துவும் கணவதியும் பத்தரை மணிக்குமேல் ஒரு சூழ்ச்சியுடன் வீடு திரும்பி விட்டார்கள். கேள்வி போட்ட கனகத்திடம் இரண்டுபேரும் என்னவோ சொன்னுர்கள், கட்டிட மராமத்துக்காக அன்றைக்கு லீவு என்று. கனகம் நம்பிவிட்டாள். கனகத்தை மூன்றும் தெருவில் இருக்கும் என் தங்கை வரச்சொன்னதாக அவர்கள் கூறியதையும் அவள் நம்பியதுடன், பத்தே நிமிடத்துக்குள் அவர்களிருவரையும் வீட்டுக்குள் விட்டுவிட்டு வெளியே பூட்டிக் கொண்டு புறப்பட்டே போய்விட்டாள். தங்கை அவளை வியப்புடன் வரவேற்று, நெடு நேரம் கட்டாயமாய் இருக்கச் செய்து மாலை நாலுமணிக்குமேல்தான் திருப்பியனுப்பினுள். அதற்குள் — தனியே விடப்பட்ட முத்துவும் கணவதியும் முதற்காரியமாகக் கோவிந்தனை அவிழ்த்துச் சடம்புக் கயிற்றுலேயே சமையலறைக்கு இட்டுச் சென்றுர்கள். அங்கே கணவதி அதைப் பிடித்துக்கொள்ள, முத்து அலமாரியிலிருந்த பால் அடுக்கை அப்படியே அதன் எதிரில் எடுத்து வைத்தான். கோவிந்தனுக்குப் பால் என்றுல் உயிர், 'சளப் சளப்' என்று வேகமாகவே நாக்கால் லாவ ஆரம்பித்தது.

கணவதி உடனே சடம்புக் கயிற்றை விட்டுவிட்டு அண்ணனுடன் கோவிந்தனின் கலர்பற்றி ஒரு விவாதம் ஆரம்பித்தான். சாம்பல் நிறம் நன்றுயில்லை என்று இருவருமே முடிவு செய்தார்கள். சட்டென முத்துவுக்கு இன்னெரு மணியான ஐடியா தோன்றியது: வீட்டின் 'கேட்'டுக்கு அடித்துப் போகக் கொஞ்சம் நீல நிறப்பெயிண்ட் ஒரு டப்பாவில் மிஞ்சியிருந்தது. அதை எடுத்து

## தகப்பனுக்கு மிஞ்சிய பிள்ளை!

இப்பொழுதுள்ள அன்சுமான் கெய்க்வாடின் தகப்பனுர் டி. கே. கெய்க்வாட் நல்ல பாட்ஸ்மன்: பீல்டிங்கில் சூரர். 1958-59ல் டி. கே. கெய்க்வாட் டெல்லி டெஸ்டில் மிக நன்றுக ஆடி 52 ரன்கள் எடுத்தார். அதற்கப்புறம் இந்தியக் குழுவுக்குக் காப்டனுக ஆகி அவர் இங்கிலாந்து சென்றுர். அவரது பிள்ளை அன்சுமான் கெய்க்வாட் தகப்பனுரை மிஞ்சி விட்டார். பெங்களூரில் அவர் ஆடிய ஆட்டத்தில் 87 ரன்களஎடுத்து உன்னத சாதனையைச் செய்தது நினைவிருக்கும். எதிர்காலத்தில் அப்பாவுக்குப் பிள்ளை தப்பாமல் காப்டனுகவும் ஆவாரோ என்னமோ, யார் கண்டது?

வந்தான். சமையலறையில் கோவிந்தனை ஒரு கதவில் கட்டிவிட்டு, இருவருமாகக் கையாலேயே பெயிண்ட்டை அள்ளி அதன்மேல் பூசினார்கள். நீல கோவிந்தன் உருவாவ தற்கே ஒரு மணி நேரமாகி விட்டது.

பெயிண்ட் தீர்ந்ததும் முத்து காலி டப்பாவை மூலையில் வீசினான். அண்ணன் —தம்பி இருவரும் தூர நின்று கோவிந் தனை அழகு பார்த்தார்கள். நீலம் பொருத்தமாகத்தான் இருந்தது என்ற கருத்துக்கு அடையாளமாக இருவரும் கைதட்டினார்கள். சத்தம் வர வில்லை. அவர்கள் கைகளில் அப்பியிருந்த பெயிண்ட்தான் இதற்குக் காரணம் என்ற

## அந்நியருக்காக ஆடிய இந்திய ஆட்டக்காரர்

**ரஞ்சித் சிங் 1897-98ல் எம். ஸி. ஸி. குழுவில் ஓர் ஆட்டக்காரராக ஆஸ்திரேலியாவுக்குச் சென்று ஆடியிருக்கிறார். ஸ்டோடார்ட் காப்டனாகச் சென்றார். தெற்கு ஆஸ்திரேலியா குழுவுக்கு எதிராக ரஞ்சித் சிங் 189 ரன்கள் எடுத்துப் புகழ் எய்தினார். சிட்னியில் நடைபெற்ற டெஸ்டில் முதல் இன்னிங்ஸில் 175 ரன்கள் எடுத்தார் இளவரசர் ரஞ்சித் சிங்.**



உண்மை அவர்களுக்கு விளங்கிவிடவே, சூழ் நிலையில் திடீரென்று ஒரு பதற்றம் பரவியது. இருவருமாகக் குழாயடிக்கு ஓடி வெறும் தண்ணீரால் பெயிண்ட்டை அகற்றப் பார்த்தார்கள். நாயின் பெயிண்ட் போனால் தங்களுக்கும் போய்விடும் என்று தோன்றவே, இருவரும் நீலக் கோவிந்தனைப் பாத்ரூமுக்கு அழைத்துச் சென்று குழாயுடன் கட்டிவிட்டு அதன்மேல் தண்ணீரைத் திறந்து விட்டார்கள். கோவிந்தன், குளித்துப் பழகின ஜாதியில்லையாகையால், தண்ணீரை மூக்கிலும் நாக்கிலும் ஏற்றிக் கொண்டு இருமு ஆரம்பித்தது. கோவிந்தனுக்கு ஏற்பட்டுவிட்ட நிற மாற்றத்தை நான் ஒருபோதும் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்ற புதிய கருத்து ஒன்று இப்போது தலை தூக்கியது. உடனே இருவருமாக எண்ணெய், சீயக்காய் எடுத்து வந்து, எண்ணெயை கோவிந்தனுக்கு அபிஷேகம் செய்து விட்டுத் தாமும் கைகளில் பூசிக்கொண்டுவிட்டு, சீயக்காய்ப் பொடியை அள்ளி அள்ளி உபயோகித்தார்கள். அண்ணன், தம்பி, கோவிந்தன் மூவருமே கொஞ்ச நேரம் அடுக்கடுக்காகத் தும்மினார்கள்.

குழாய் மீண்டும் கொட்டியது. நீல கோவிந்தன் சீயக்காய்ப் பௌடர்வரை ஏற்றுக் கொண்டுவிட்டு, மறுபடியும் தண்ணீரைக் கண்டவுடன் ஒரே திமிறாகத் திமிறியதில் சடம்புக் கயிறு அறுந்துவிட்டது. மறுநிமிடம் வீட்டுக்குள் கோவிந்தன் தலைதெறிக்க ஓட்டம் பிடிக்க ஆரம்பித்தது. முத்துவும் கணவதியும் அதை ரூம் ரூமாக விரட்டினார்கள். காமெடிப் படம் மாதிரி மூவரும் சுற்றிச்சுற்றி வந்த பிறகுதான், அண்ணன் தம்பி இருவருக்கும் புத்தி வந்தது. சேர்ந்தே ஓடிக் கொண்டிராமல் பிரிந்து ஓடி அவர்கள் நாலே நிமிடத்தில் கோவிந்தனை வளைத்துப் பிடித்தார்கள். அப்போதுதான் கனகம் பூட்டைத் திறந்துகொண்டு வீட்டுக்குள் வந்தாள். என்ன ஏது என்று பூராவாக விவரம் புரிவதற்குள் நான் வந்துவிட்டேன்.

அப்போதுதான், ஆரம்பத்தில் குறிப்பிட்டவாறு, அந்த யமப் பயல்கள் இருவரையும் நான் வார்த்தைகளாலேயே துவைத்தெடுத்தேன்.

இறுதியில், மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு, என் முடிவை அறிவித்தேன். இரண்டுபேரும் தாறுமாறாக அழுதான்கள். "போங்கடா வெறும் பயல்களா!" என்று நான் அவர்களை அப்படியே அலற விட்டுவிட்டு கோவிந்தனைத் தூக்கிக் கொண்டு புறப்பட்டேன்.

நாலைந்து மைல் நாயுடன் நடந்தே பிரயாணம் செய்து, அழகப்பனிடம் எல்லாவற்றையும் விளக்கமாகச் சொல்லி, மன்னிப்புக் கேட்டுக் கொண்டு, கோவிந்தனைத் திருப்பிக் கொடுத்துவிட்டு நான் நடந்தே இரவு ஒன்பது மணிக்கு வீடு திரும்பியபோதும் முத்து—கணவதி சோதரர்களின் இரட்டை எக்காளம் கேட்டுக் கொண்டிருந்தது. அவர்களை மிரட்டித் தூங்க வைத்தேன்

மறுநாள் காலையில் நான்தான் முதலில் எழுந்தேன். எங்கள் அறையில் கனகம், பாவம், இன்னமும் களைப்பு நீங்காமல் தூங்கிக் கொண்டிருந்தாள். பயல்களைப்பற்றி நினைத்துக்கொண்டேன். ரொம்பக் கத்திக் கூப்பாடு போட்டு விட்டேனோ என்ற பச்சாத்தாபம் வேறு வழக்கம்போல் என்னைத் துன்புறுத்த ஆரம்பித்தது. வீட்டு முன்புற அறைக்கு விரைந்தேன்.

அங்கே — அங்கே — அங்கே -

முத்துவும் கணவதியும் கட்டிலில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருக்க, அவர்களுக்கு நடுவில் குளிருக்கு அடக்கமாக ஒடுங்கிய நிலையில் கோவிந்தன் படுத்து ஆழ்ந்த நித்திரையிலிருந்தது! நாலைந்து மைல் தூரத்தை அது எப்படிக் கடந்து எப்போது வந்தது, எப்படி வீட்டை அடையாளம் கண்டு கொண்டது கேட்டைத் தாண்டிவந்தபின், முன்புற அறையின் திறந்த உயரமான ஜன்னல் வழியாக அது எப்படி எம்பிக் குதித்து உள்ளே வந்தது — இதெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால் கோவிந்தன், முகத்தில் நன்றியும் மகிழ்ச்சியும் ஜ்வலிக்க, அங்கே அவர்களுக்கு நடுவே படுத்து உறங்கிக் கொண்டிருந்தது உண்மை.

நன்றி கெட்ட ஜென்மம்!

சேரனின் மேலாதிக்கத்தை ஏற்காது சுதந்திரமாகச் சோழ மண்டலத்தையும் பாண்டி மண்டலத்தையும் ஆண்டதனுல்தான் சோழனும் பாண்டியனும் பத்தினிக் கோட்ட விழாவுக்கு வரவில்லையென்பதும் இங்கு நன்கு புலப்படுகிறதல்லவா?

சேரனின் விருந்தினர்களாக வந்திருந்த அரசர்கள் விடுத்த வேண்டுகோளுக்குக் கண்ணகித் தெய்வம் இசைந்ததனை,

''தந்தேன் வரம்' என்று
எழுந்தது ஒரு குரல்''

என்ற வரிகளில் அறிவிக்கின்றார் கவிஞர்.

''ஆங்கு, அதுகேட்ட,
அரசனும் அரசரும்
ஓங்கிருந்தானையும்
உரையோடு ஏத்த,
வீடுகண் டவர்போல,
..........''

''பத்தினிக் கோட்டத்திலிருந்து 'தந்தேன் வரம்' என்று அசரீரியாக எழுந்த குரலைக் கேட்ட சேரனும், பிற மன்னரும் வீட்டின் பத்தையே அடைந்து விட்டவர்போல மகிழ்ந்தனர்.''

இதன்பின், சிலப்பதிகார ஆசிரியரான இளங்கோவடிகள், தாம் படைத்த காப்பியத்துள் தம்மையும் ஒரு பாத்திரமாக்கிக் கொள்ளுகின்ருர், கதை தம் காலத்தில்தான் நிகழ்ந்ததென்பதனை நமக்கு உணர்த்த!

இதோ, கண்ணகித் தெய்வம் தமக்குக் காட்சியளித்துக் கூறியதனை அடிகளாரே கூறுகிருர்: கேட்போம்:

''வேள்விச் சாலையின்
வேந்தன் போந்தபின்




யானும் சென்றேன்,
என்னெதிர் எழுந்து,
தேவந் திகைமேல்
திகழ்ந்து தோன்றி,
'வஞ்சி மூதூர்
மணிமண் டபத்திடை
நூந்தை தாணிழல்
இருந்தோய்! நின்னே
''அரைசு வீற்றிருக்கும்
திருப்பொறி உண்டு'' என்று
உரைசெய்தவன் மேல்
உருத்து நோக்கிக்
கொங்கவிழ் நறுந்தார்க்
கொடித்தேர்த் தானைச்
செங்குட்டுவன் தன்
செல்லல் நீங்க,
பகல்செல் வாயிற்
படியோர் தம்முன்,
அகலிடப் பாரம்
அகல நீக்கிச்,
சிந்தை செல்லாச்
சேண்நெடுந் தூரத்து,
அந்தமில் இன்பத்து,
அரசாள்வேந்து' என்று,
என்திறம் உரைத்த
இமையோர் இளங்கொடி.''

''பத்தினிக் கோட்டத்திலிருந்த செங்குட்டுவன் அங்கிருந்து வெளியேறி மாடல மறையவனுடன் வேள்விச் சாலைக்குச் சென்றான். அதன் பின்னர், பத்தினித் தெய்வத்தின் முன் யானும் சென்றேன். அப்போது, கற்சிலையாக இருந்த கண்ணகித் தெய்வமானது, அங்கிருந்த தன் தோழியான தேவந்தியின் மேல் தோன்றிப் பேசத் தொடங்கியது.

(தொடரும்)

(மயிலை இலக்கிய வட்டத்தில் நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து)


Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka
இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப் பதிப்பு) 60 மலேசியக் காசு